| ஆதாம் ஏவாள் | |
|---|---|
| எண் | உள்ளடக்கம் |
| 1 | ஆசான் |
| 2 | அதிசயம் |
| 3 | ஆதாம் ஏவாள் |
| 4 | அம்மானும் இங்கிலீசும் |
| 5 | அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள் |
| 6 | அங்கயற்கன்னி |
| 7 | அந்திப்பொழுது |
| 8 | அருள் வரம் |
| 9 | அவள் பார்த்தபொழுது |
| 10 | அவதாரம் |
| 11 | சீன அழகி |
| 12 | எச்சில் முத்தம் |
| 13 | ஏழாம் சுவை |
| 14 | ஈமெயில் விடு தூது |
| 15 | இனி ஒரு காதல் எனக்கில்லை |
| 16 | இனிக்கும் இன்ப இரவு |
| 17 | இரத்தல் இழிது |
| 18 | இரவு நேர நிலவு |
| 19 | இதுதான் காதலா? |
| 20 | இன்பத்துப்பால் |

# ஆசானும், இரசிகனும்

---

மழலையின் எழுத்தையெல்லாம் கவிதை எனப்புகழ்ந்து
கவிஞன் என்று வாழ்திடும் உறவே,
என்ன தவம் செய்தேன்-உங்கள் அன்பிற்காய்
அரிய உம் நட்பிற்காய்.

பொன்னோ?, வெள்ளியோ? புழுதியோ எனப் புனைவதையெல்லாம்
புடமிட்டுப் பரிசோதித்து-உறவோடும், உரிமையோடும் திருத்தும்,
ஆசானும், இரசிகனுமாய் நீங்கள், ஈரவிழிகளோடும்,
நன்றி சொல்லும் இதயத்தோடும் நண்பன் நான்.

என் கவிதை அரங்கேற்றம்- நாளும் உங்கள் அவையில் நடந்தேற,
உங்கள் வாழ்த்தும், பாராட்டும் என் எழுத்திற்கு புது மெருகூட்ட
என் நெஞ்சிலே கவிதை -நினைவிலே நட்பின் புதிய கீதை.
ஐயா நீ வாழி! தாயே நீ வாழி!

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-28-04-2023

# அதிசயங்கள்

---

பூக்களை மிதிக்காது, மெல்லவும் கசக்காது,
குழந்தைகளாய்த் தேனருந்தும் வண்டினங்கள்,
இதழ்கள் விரித்து முகம் மலர
பால் கொடுக்கும் தாய்களாய்த் தேன்மலர்கள்

வரண்ட பூமியும், காய்ந்த நதிகளும் வளம்பெற
மழையாய் கரைந்துருகும் கார்மேக வள்ளல்கள்
பசியாறப் பழமும், இளைப்பாற நிழலும் ஈந்து
விருந்தோம்பும் பழமரங்கள்

விதைக்காமல், அறுக்காமல் ஆடிப்பாடும் பறவையினங்கள்
நெய்யாமல் நூற்காமல்- நாளும் புத்தாடை அணியும் பூவினங்கள்
வரண்ட தரையில் மாண்டு கிடக்கும் புல்லினங்கள்-
மழைபட உயிர்த்தெழும் அதிசயங்கள்

காதலியைப் பாடி அழைக்கும் குயிலினங்கள்
ஆடி அழைக்கும் கலாபமயில்கள்
வாழ்வில்தான் எத்தனை அதிசயங்கள்.

கடல் தேடிப் பாதையின்றிப் பயணிக்கும் நதிகள்
சங்கமத்தில் நதியே கடலாகும் பரசவ நிலைகள்

தேய்ந்து வளர்ந்தாலும் ஒளி குன்றாத நிலவு
ஓய்வின்றிச் சுழன்றாலும் ஒருபோதும் களைக்காத பூமி
நாளும் எரிந்தும் எரிபொருள் தீராத சூரியன்
ஓயாது வீசியும் களைக்காத தென்றல்

எழுந்தும், விழுந்தும் இடையறாது கரைதேடும் அலைகள்
எப்போதும் தியானத்தில் அசையாது
மூழ்கிக்கிடக்கும் ஆழ்கடல்

பாதையில்லா வானில்-நாளும் பயணிக்கும் பறவைகள்
திசையறியாத பாதையில் நீந்திடும் கடல் மீன்கள்
இசைமேதைகளை மயங்கவைக்கும் கவிக்குயில்கள்
நாட்டியப் பேரொளிகள் அதிசயிக்கும் கலாபமயில்கள்

வாசங்கள் வண்ணங்களோடு வாழும் வண்ணமலர்கள்
கயிறில்லாக் காற்றாடிகளாய், கோள்களும் நட்சத்திரங்களும்

கடிகாரம் பார்க்காத பருவ காலங்கள்
ஓடு பாதை இன்றிச் சுழன்று ஓடிவரும்
கோள்களும், நட்சத்திரங்களும்.

கட்டிடக் கலையை மயங்கவைக்கும்
கறையான் புற்று, தூக்கணாம் குருவி கூடுகள்

பகுத்தறிவிருந்தும், நிலவைத்தொட்டும்
மானுட வரலாறு எங்கும் இரத்தக்கறை
சாதி, மத, இன, மொழி, நிற பேதங்களால்
ஓயாது ஒலிக்கும் போர்ப் பறை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-28-04-2023*

# ஆதாம் ஏவாள்

---

மலர்ப்பஞ்சணையில் மாதா படுத்திருந்தாள்
மூப்பும், பிணியும் வாட்டிட-வாடும் மலராய்
ஆதாமின் காதல் மலர் ஏவாள்-மாலை வந்ததென
பூ விழிகள் மூடி உதிரக் காத்திருந்தாள்

மரணம் வா என்றழைக்க-ஆதாம் மனமோ,
ஆருயிரே என்னை விட்டு பிரியாதே எனத்துடிக்க
சுவாசக் காற்றோ தந்தவனைச் சேரத்தவிக்க
விண்ணும், மண்ணும் சோர்ந்து நின்ற நேரம் அது

விழிகள் கண்ணீர் மாலை தொடுக்க
மொழிகள் தேம்பித் தவிக்க-என் என்பின் என்பானவள்
ஊனில் ஊனானவள், இணைபிரியாத் தோழியே
இறைவன் தந்த துணைவியே என்னைப் பிரியாதே

நீயில்லா உலகோ நிலவில்லாத வானமடி
உனைப்பிரிந்து என் உயிரும்-ஒரு
கணமேனும் வாழாது இது திண்ணமடி

துடிக்கும் என் இதயம் உன் மீளாத் துயிலை தடுக்கட்டும்
தவிக்கும் என் உயிரும் உன் இறப்பை தடுத்து நிறுத்தட்டும்
இல்லையேல் உன்னோடு போகட்டும்.

நன்மை தீமை அறிந்திட-அறிவுக் கனியை உண்டு
எனக்கும் தந்த புரட்சிப்பெண்-துணைவியாய்த்,
தோழியாய்த், தாயாய் என்னோடு வாழ்ந்த புதுமைப்பெண்
களைத்துக் கண்மூடிப் படுத்திருந்தாள்
காலனின் அழைப்பிற்காய் காத்திருந்தாள்.

தந்தையாம் கடவுளையும்-தாய் வீடாம்
இன்ப வனத்தையும் துறந்து, வனம் வந்த முதற் சீதை,
மீளாத்துயில் கொண்டு களைப்பாறக் காத்திருக்கும் கோதை
பொன்மேனி வாடிப் பூவிழிகள் சோரப் படுத்திருந்தாள்,

காயீன், ஆபேல், ஈனோக், சேத் என வாரிசு தந்த தாய்மை
காயீன், ஆபேலை கொன்றபோது துடித்த பெண்மை
மரணம் வெல்ல முடியாத உண்மை என்றானபோது
அழுவதனால் ஆவது ஏதுமில்லை என்ற அம்மை.

அண்ணண், தம்பியைக் கொன்றபோது-சாவின்
பயங்கரம் புரிந்தது, குருதியின் நிறம் தெரிந்தது
காயீன் பிரிந்தபோது பெற்ற மனம் பித்து.
பிள்ளை மனம் கல்லு அறிந்த மனம் அழுதது

மண்ணோடு போராடி நான் உழைக்க-மகிழ்வோடு
பூத்தொடுத்து மாலை கட்டி மங்கையவள் என் வியர்வை துடைக்க
அள்ளியணைத்த கன்னியிலோ ஆனந்தப் போதை
கொஞ்சும் கிளிகளாய் வாழ்ந்த வாழ்வோ காதற் கீதை

கார்குழலும், கயல்விழிகளும் கட்டியணை-இதழ்களைக்
கவ்வியணை எனக் கவி பாட-மலைத்தேனும்
மாதேவியிவள் முத்தத்திற் ஈடாகாது- மதுமலர் மஞ்சமும்
மாதிவிள் பூமடிக்கு இணையாகாது-பூவாசமும்
பூந்தேவியின் சுகந்தத்திற்கு நிகராகாது.

மகிழ்ந்து சிரித்து வாழ்ந்த வாழ்வில்
மரணம் நெருங்க, ஆண் மனம் நொருங்க
ஓய்ந்து களைத்துப் படுத்திருந்தாள்
உறவு சொல்ல இறைவன் தந்த துணைவி.

மண் குடிசையையும் மாளிகையாக்கி மலர் மஞ்சத்தில்
நாளும் உறங்கிட பூப்பறித்து மாலை தொடுத்த பூவை,
கடந்த வந்த பயணத்தில் என்னோடு
கல்லிலும். முள்ளிலும் நடந்தவந்த தோகை

செவ்விதழ்களிலோ என்றும் வாடாத புன்னகை
இதழ் “கள்” பருகியும் இவள் இதழ்களில்
என்றும் தீராத காதல் மதுவின் பல்சுவை

கண்ட முதல் பொழுதே நெஞ்சில் காதல் பொங்கிட,
மனம் பாடிய கவிதையோ -என் பாதி நீயடி, உன் பாதி நானடி
நீயின்றி நானில்லை இதுதான் நிஜமடி

மலர்ப்படுக்கையில் நீ உறங்க-மரணப் படுக்கையில்
என் மனம் தவிக்க, மீண்டும் என்னை வாட்டும் தீயாய்-
ஏதேன் தோப்பின் கொடுந் தனிமை ஏனடி என் கண்மணி

கூவும் குயிலாகிக் குயிலோடு கவி பாடியவள், ஆடும்
மயிலாகி, கலாபமயிலோடு ஆடி வாகை சூடியவள்,
துள்ளும் கலைமானோடு புள்ளி மானாய்
துள்ளி விளையாடியவள் தூங்குகிறாள்

மலையருவியில் நீராடிய பைங்கொடி
வண்ண மலர்கொடி உடுத்திடும் பூங்கொடி
மலர்களும் நாணிடும் வண்ணமலர்
இதழ்களால், இதழ்களில் கனிரசம் தந்து
காதல் போதை தணித்திடும் மதுமலர்

ஆறாம் அறிவோடு நிமிர்ந்து நடக்க
ஆசானாய் அடி எடுத்து கொடுத்த கலைமகள்
துணையாய்த் தோழியாய்த் தாயாய்த், தாரமாய்
அருகிருந்த அன்புறவு பிரிவு சொல்ல,
நெஞ்சிலே விழிக்கும் சோக எரிமலை.
மனதை அச்சுறுத்தும் பிரிவின் சுனாமியலை

என் உயிரே நீ போனபின் இறகொடிந்த பறவை நான்
வான் நிலவே உனை பிரிந்தபின் வடிவிழந்த இரவு நான்
கொட்டும் மலையருவியும் கோவென்றே கதறி வீழ, குமுறிக்
கடல் அலைகளும் கரை பாய-வான் மதியும் முகம் கறுத்ததடி
வந்து வீசும் தென்றலிலும் சோகத்தின் வெம்மையடி

வண்ணமலர்களும், வான் நிலவும் உன் முகம் காட்ட-
முக்கனியும், தேனும் உன் இதழ் சுவை கூட்ட,
பாடும் குயிலும், ஆடும் மயிலும் ஓய்ந்து தம் சோகம் காட்ட,
பூத்த மலர்களும் வாடி உடன் உதிர்ந்ததடி பூவே
நீ சூடவில்லை என்று, கனிந்த பழங்களும் கருகி விழுந்ததடி
காதல் கனியே உன் இதழ் சுவைக்கவில்லை என்று.

அலையில் விளையாடி, கரையில் மணல் வீடு கட்டி
மலைத்தேனெடுத்து மகிழ்ந்து விருந்தாடி
மலர் தொடுத்து மாலை கட்டி, இடைதொடுக்க மேகலையாய்
கையணிந்து வளையல்களாய் கொண்டாடிய வாழ்வு

அன்ன நடையில் கிளிஞல் கொலுசாய் ஒலிக்க
சின்ன இடையில் மலர் மாலை ஆடையாய் ஜொலிக்க
குமுதச் செவ்வாயில் அமுதச் சுவை அருந்திட அழைக்க
காதலான வாழ்வு கன்னியோ காதற் கனியான உறவு

குறுநகையும், சேல்விழிகளும் என்னைக் கொல்ல
தேன்மொழியோ மாங்குயிலின் கானத்தை வெல்ல
காமனும் கண்டால் துன்புறும் பேரழகு
கவிஞனாய் என்னை மாற்றிய பெண்ணழகு
சூடிட இறைவன் தந்த வாடாத பேரழகு
வாடுவதென்ன, என் மனம் சோர்வதென்ன?

எடுத்த அடியில் இதயம் துடிப்பை கூட்ட
அடுத்த அடியில் சுவாசம் மூச்சை மூட்ட
அழகின் இலக்கணமோ, ஐம்புலனும்
ஆறறிவும் மயங்கும் புதுச்சுவையோ இவள்

கடல் அலைகளும் காணும்போதெல்லாம்
கொட்டு மேளம் கொட்ட-கொண்டாடிச் சேர்ந்த உறவு
கண் மூடி களைப்பாறுது வாழ்ந்தது போதுமென்று.

காதல் கண்மணி-உன்னோடு
வாழ்ந்த காலமெல்லாம் வசந்தமடி
வாட்டும் உன் பிரிவோ
நாளும் தீய்க்கும் கோடையடி

உனை பிரிவே என் நரகு-உத்தமியே
உன் உறவே என் சொர்கவுலகு

நீ உறங்க, என் உயிரும் ஒடுங்குதடி
நீயில்லாத உலகும் ஒளியின்றிச் சுருங்குதடி
கொடுந்தீ வாழும் நரகாய் -உன்
பிரிவு என்னைத் தீய்க்குதடி

நான் உறங்க மடி தந்த நந்தவனம்
நலம் வாழ துணைவந்த இன்பவனம்
வாடிக் கிடப்பதென்ன அன்புறவே-என்
வாழ்வும் பாலையாய் மாறுவதென்ன?

நீயின்றி என் வாழ்வு நிலைக்காது-நிலவின்றி அல்லி மலராது
வண்ணமலரே, என் சுவாசக்காற்றே நீ உறங்கு
உன் அருகே நானிருப்பேன், உன் துணையாய்
என் துணையே, நானும் வருவேன்
மரணமும் நம்மைப் பிரிக்க முடியாது

கள்ளிருக்கும் மலர்சூடிய கார்மேகக் கோதை
வெள்ளி மலர் சூடி வாடியிருக்க,
நீலோற்பல விழிகளும் நீள் இரவு வந்ததென மூடி
மீளாதுயில் கொள்ளக் காத்திருக்க வாடி நின்ற ஆதாம்

நீர் கசியும் விழிகளுக்குள்-நெஞ்சம் பனியாய்
உருகி கரைந்திருக்க கண் மலர்ந்த காதலியை
கண்ணோக்கி விண்ணமர்ந்த -இறைவனை
மனம் வேண்டிட வருந்தி நின்ற ஆதாம்

தேவன் தந்த துணையும் தேவதையுமானவளைப் பிரியும்
நேரம் வந்ததென மனம் சொல்லியழ-விலக்கப்பட்ட
கனியின் சுவையும் விஷமாய் சாவில் முடிந்திட,
காதலே நீயில்லா உலகும் உன்னைப் பிரிந்த வாழ்வும் நரகமடி

உன்னைப் பிரிந்து என் உயிரும் ஒரு கணமேனும் வாழாது
உன் பிரிவே என் மரணமடி-உன் வாழ்வே என் ஜனனமடி
வேரும் , விழுதும் தளர்ந்திட-நிழல் தந்த
விருட்சம் வீழ்ந்தது வாழ்ந்தது போதுமென்று.

ஒன்றாய் வந்த சொந்தமும்
ஒருவரில் ஒருவராய் கலந்த இன்பமும்
உலகில் முதற் காதலும்-
ஒன்றாய்உறங்கிடப்போனது

காதல் முடிவதில்லை-அது
பிரிவிலும் தொடரும்- பிரிக்க முடியாத உறவு

அன்னையும். தந்தையும் ஒன்றாய்த் தூங்கிட
அழும் விழிகளோடு அன்பு மகன் சேத்.

ஆண்டவனும் ஆசிர் வழங்கிய தன் படைப்பை பார்த்தான்
விழிகளில் முட்டிய நீரை மெல்லத் துடைத்தான்

மரணம் -முடிவல்ல
பெரும் பயணத்தின் ஒரு புதிய தொடக்கம்
புத்துடை மாற்றி தொடரும் பயணம்போல்
புத்துடல் மாற்றி தொடரும் ஆன்மாவின் பயணம் ?

இருமையின் வடிவங்களாய் ஆதாம், ஏவாளின் தோற்றம்
ஒன்றானபோது சிவசக்தியான மாற்றம்
அர்த்தநாரிஸ்வரனாய் இறைவனோ நிர்க்குண பிரம்மம்
அம்மை, அப்பனான உருவமோ சகுண பிரம்மம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-28-04-2023*

# அம்மானும் இங்கிலிசும்

---

எங்கட" நவம் அம்மான்" நன்றாக இங்கிலிசுப் பேசுவார்
புனித மைக்கல் கல்லூரியில் அவாளுக்கு
"கறுப்பு அமெரிகன்" எனப் பட்டப்பெயர்.

அவர் யாழ்பாணத்து சைவவேளாள டீச்சரை
சில வயது மூத்த-மணியம்மையை மணந்து கொண்டார்.
அவ கொள்ளை அழகு, நல்ல சிவப்பு நிறம்.

அவாள் அம்மா மலேசியா பென்ஷனியர்.
படிப்பதற்காக மகள் இருவரும்
மெதடிஸ் திருச்சபையில் சேர்ந்தவர்
கலியாணத்திற்காக இப்போது
இவா கத்தோலிகராய் மாறினம்.

தாய் சுத்த சைவம், தனியாய்ச் சமைச்சு
தனியாய் சாப்பிடுவா.
தீட்டு தீட்டு என்டு எப்பவும் சுத்தம் பேணிடுவார்

இரு பிள்ளைகள் பிறந்திட நல்லா படிப்பிக்கவேனும் என்டா
யாழ்ப்பாணம் போகவேண்டும் என்டு
அம்மான் மனுசி பிடிவாதமாய்ச் சொல்லிட்டா.

சிலகாலம் கொழும்பு, மட்டக்களப்பு, அம்பாறை
இடங்கள்ல வேலை பார்த்திட்டு யாழ்பாணம் போனாங்க.
அம்மான் எங்களோட தமிழிலும்
யாழ்பாணத்தில் இங்கிலிசிலும் பேசுவார்.
ரொம்ப நல்ல மனுசன்.

அம்மான் மட்டக்களப்பிற்கு வந்தால்
அக்கா வீட்டிலதான் தங்குவார்-
அவா அம்மாவ "புள்ளே" என்று
செல்லமாய் அழைப்பார்

சினை நண்டு, மட்றால், காட்டுப்பன்றி
கொடுவாமீன் சினை என்று ஆக்கிப்போட
நல்லாச் சாப்பிடுவார்
அங்க இதெல்லாம் கிடையாதடி

என்னட மனுசி இப்பவே மகளுக்கு சீதனம் சேர்க்கிறா
ஒரே கத்தரிகாயும் சோறும்தான் என அலுத்துக்கொள்வார்.

நல்ல படிச்சு மூத்த மகன் டாக்குதர
மகள் இஞ்சினியரா படிக்க
பேராதெனியா பல்கலைக் கழகத்திற்கு வந்தினம்.

யுத்த பிரச்சினையால்-பணி பகிஷ்கரிப்பால்
பல்கலைக் கழகத்தை அடிக்கடி மூடுவினம்.
இதால படிப்பு பல காலம் தடைபட்டுடிச்சி.

அம்மான் மனுஷிக்கு மார்பு புற்றுநோய் வர
சிகிச்சைக்கா கொழும்பு வந்தாங்க.-ஒரு மார்பு
அகற்றப்பட்டு தலைமயிரெல்லாம் கொட்டிட
பார்க்க ரொம்பவும் பரிதாபம்.

மகன் கொழும்பில ஒரு வெள்ளைகாரியைச் சந்திச்சு
அவளை ரகசியமா கலியாணம் முடிச்சு
சொல்லாமாக் கொள்ளாம அமெரிக்க போயிட
இவாளுக்கு இது பெரிய அதிர்ச்சி.

நாங்க மட்டக்களப்பிலே,
அக்கா புருஷனும், தம்பியும் கொழும்பில
இவங்க அடிக்கடி போய் பாப்பினம்.

ஒரு நாள் அம்மாவுக்கு சேதி வந்தது
புள்ளே மனுசி செத்துபோயிட்ட
நாங்க புதைச்சிட்டம்.

செத்த சில நாளைக்கு பின் வந்த துக்க சேதி.
அம்மாவுக்கு பெரிய அதிர்ச்சி.
அத்தானும், தம்பியும் கொழும்பிலே இருந்தும்
ஒரு வார்த்த சொல்லல என மனதில பெரிய துக்கம்.

சில மாதங்களுக்கு பின்னர்-அம்மான்
மட்டக்களப்புக்கு வந்தார், மகள் ஒரு யாழ்பாண வேளாள
இஞ்சினியர கலியாணம் முடிச்சிட்டு
அவுஸ்திரேலிய போச்சு, இப்ப நான் மட்டும்தான்
அதான் உன்னோட இருக்க வந்திருக்கன்.

சில மாதங்களுக்கு பிறகு
நானும் மகளோட போயிருவன்.

இப்ப எல்லாம் தமிழ்ல பேசுவார், ஒரு நாள் நான் கேட்டன்
ஏன் அம்மான் நீங்க அன்டி செத்துப்போனப்பவும்
மகள்ர கலியாணத்திக்கும் எங்களுக்குச் சொல்லல
அம்மாக்கு சரியான துக்கம் என்டு

அப்ப சொன்னார் அடேய் நீங்க அங்க வந்த
நான் மட்டக்களப்பான் என்டு மற்றவைக்கு தெரிஞ்சிடும்.
என்னட மனுசி சொல்லிச்ச
அப்பா நீங்க எப்பவும் இங்கிலிசிலதான் பேசனும்
இல்லாட்டா யாழ்பாண சனங்க நினைப்பினம்
நான் ஒரு தாழ்ந்த சாதி மனுசனை கலியாணம்
பண்ணிட்டன் என்டு
இதால நம்ம ஒதுக்கி வைப்பினம்.

மிச்சம் கவனம், உங்கட தமிழ்,
எங்கட யாழ்பாணத் தமிழ் மாதிரி இல்ல
லேச நீர் கதைச்சாலே கண்டுபிடிப்பினம்.
நீங்க மட்டக்களப்பான் எண்டு.

மட்டக்களப்பு என்டா இங்க
தாழ்ந்த சாதி என்டுதான் நினைப்பு
நம்மட பிள்ளைகள்ர வாழ்க்கை பாழாகிடும்.

சாதிகள் இல்லையடி பாப்பா
பாரதி பாட்டில்தான் உண்டு-நிஜத்தில்-
ஆயிரம் உண்டிங்கு சாதி
அதனால் ஆளுது ஆணவ ஜாதி
மானுட இது மனுஸ்மிருதியின் நீதி?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-28-04-2023

# அண்ணலும் நோக்கிட,அவளும் நோக்கினாள்.

---

கண்டதும் பூவிழிகளில் காதல் பூத்தாட-நெஞ்சில்
இன்பதேன் கங்கையாய் பாய்ந்தோட-பார்க்கத்
தவித்துப் பார்க்கும் பார்வையில் விரகதாபம் -பேசத்
தவித்து விழிகள் பேசும் மொழியில் மோகன பாவம்

உண்டு சுவைத்த தேனிலும் இனிதாய்
ஒருவர் அழகை ஒருவர் கண்டு சுவைக்க
இருவர் விழிகளிலும் காதல் தேன் சுரக்க
மலரும், வண்டுமாய் மனதில் கொண்டாட்டம்

கன்னி மேனியிலோ நாணம் கவிதை எழுத
காளை மனதினிலோ காதல் கவிதை சொல்ல
காதல் மழையில் கானக்குயில்களின் பாடல்.
கடலும், நதியுமாய் இதயங்களின் கூடல்

‘‘விழி கள்ளை’’ உண்டு விழிகள் போதையில் மயங்க
மொழி மறந்து விழிகள் காதல் மொழி பேச
இமைக்க மறந்த விழிகள்-துடித்து தவித்த இதயங்கள்

துடிக்கும் இதயங்களும் காதலால் குதூகலித்திட
மோனமும் மொழியாகிப் பார்வையும் பரவசமாகிட
ஒரு பார்வையில் பல நூறு காதல் நிலைகள்.

மொழியிழந்து, விழிகளோடு விழிகள் கதைபேசி
கொஞ்சும் கிளிகளாய் நெஞ்சம் களிக்க-இதயமோ
கடல் அலைபோல் பொங்கி கரைபாய
காமன் கணைபட்டு துடித்த காதல் இதயங்கள்

கண் பார்த்து நெஞ்செழுதும் காதல்
விண்ணைத் தாண்டி காமனையும் வருத்த
விழிகளால் விழிகளைத் தழுவி
இதுவரை அறியாத காதல் பரவசத்தை
இதயங்கள் சுவைத்த இன்பம்தான் என்னே!

அண்ணலும் நோக்கிட அவளும் நோக்கிட
கண்களின் காந்தப் புலத்தில் கட்டுண்ட காதல் இதயங்கள்
பார்வை தந்த காதலால் பாவையும் மயங்கிட,
பார்த்தீபனும் கிறங்கிட-ஒருயிரும் ஈருடலுமான பரவசம்

கண்களும் கண்களைத் தழுவிக் காதல் சொல்லிட
காளையும், கன்னியைப் பருகி இன்புற
காதலின் போதையை கோதையும் பருகித் துன்புற
பொன்மேனியில் நாணத்தின் செம்மை
“விழி கள்” உண்ட போதையில் விழிகளிலும் செம்மை

அண்ணலும் நோக்கினான், அவளும் நோக்கினாள்
கண்களின் தழுவலில் காதல் மின்னிட
வில்லவன் புன்னகையில் வேல்விழியாள் மயக்கம்
விரிந்த பொன் மார்பில் தலை சாய்ந்திட ஏக்கம்

இதயம் சொல்ல நினைத்ததை
இருவர் விழிகளும் சொல்லி மகிழ்ந்திட-கண்டதும்
காதல் கொண்டதும் ஆயிரம் கதை பேசியதும்
இந்தப் பொல்லாத பூக்கண்களே

பூவையின் அழகில் பூந்தேனியாய் ஸ்ரீராமன் மயங்கிட
காளையின் அணைப்பில் கன்னியும் சுகம் காண
பார்வைகளில் பொங்கிடும் ஆனந்தப் பரவசம்
பரந்தாமனும், தேவியும் காதலில் சங்கமம:

காமனும் மகிழ்ந்தான் கண்ட முனி
விஸ்வாமித்திரனும் மகிழ்ந்தான்
இதுதான் காதல் என்றே
கம்பனும் காவியம் படைத்தான்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-28-04-2023*

# அங்கயற்கன்னி

---

அழகிய கயல்களடி கன்னி உன்தன் விழிகள்
அமுதூறும் செவ்வாயிதழ்களில்-வற்றாத கனிமொழிகளடி,
இடை தாண்டிச் சதிராடும் மதுமலர்க் கூந்தல் நடுவே
ஒளிரும் பௌர்ணமியாய் வான்மதி நீயடி

பேரழகே, உன்னைக் கண்டு இமைக்க மறந்த
என் விழிகளும், துடிக்கமறந்து என் இதயமும்
உன்னால் நிகழ்ந்த அதிசயங்களடி

பூவனமாய் விரிந்த நெஞ்சுக்குள்
இனிக்கும் பூந்தேனாய் உன் நினைவு
பூங்காற்று உலாவரும் என் சுவாசத்தில்
பூவாசமாய் உன்தன் கனவு

நினைத்தாலே தேனாய் இனிக்கும் உன்தன் நினைவு
மல்லிகையாய் மனதில் மணக்கும் உன்தன் காதல் உறவு
மலரும் நிலவாய், மயக்கும் அழகாய்
இதயக் குளத்தில் பூத்த தாமரையாய் எனக்குள் நீயடி
உனக்குள் நானடி அங்கயற்கன்னி

காதல் வரம் தருவாய் காதல் கனியே
என் கனவுக் கன்னியே

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-29-04-2023

# அந்திப் பொழுது

---

அந்தி மயங்கும் நேரம்-சீதளத் தென்றல் தழுவிச் சீராட்ட
சிற்றலைகள் கரைமோதிச் சலசலக்க,
ஒற்றைக் காலில் மீனுக்காய்த் தவமிருக்கும் கொக்கு
கொத்திப் பறந்த வண்ண மீன்கொத்திக்கு மீனோ இலக்கு

வானில் கூட்டம் கூட்டமாய்க் கதைபேசிக்
களிப்போடு வீடு திரும்பும் புள்ளினங்கள்.
கொஞ்சும் கதைபேசும் கிளிக்கூட்டம்
சிலுவை குறியிட்டுப் பறக்கும் நாரைக் கூட்டம்
கூட்டமாய்ப் பறக்கும் கடற்காகங்கள்-
தனித் தனியாய் பறந்து வரும் காக்கைகள்

உதிர்ந்த மலர்களும் ஒரு பொழுது வாழ்ந்த களிப்பில்
உவகையோடு தரையில் கிடக்க-எங்கும்
வீடு திரும்பும் இன்பக் களிப்பு

ஆறு மெல்ல அசைந்தாடிக் கடல் ஓட-கடலும்
அலைக்கரம் விரித்து அள்ளியணைத்து மகிழ்ந்தாட
ஆறும் கடலாகும் அதிசயச் சங்கமம்.

வீடு திரும்பிட-என்னுள் என் வீட்டைக்காண
என்குள்ளே என் யாத்திரை-இயற்கை விடுக்கும்
அழைப்பு என்னையும் ஆட்கொள்ள
நெஞ்சினில் இன்பக்களிப்பு.

கனவில் வாழ்கின்றோம்- மானிடரே
நாம் ஒவ்வொருவரும் -ஆளுக்கோரு
மாய உலகில் வாழ்கின்றோம்

விழித்த பின் அறிவோம் இது வெறும் கனவொன்று
விழிப்புணர்வே உண்மை, விழிப்புணர்வே நிலைவாழ்வு
விழிப்புணர்வே நம் வீடு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-29-04-2023*

# அருள் வரம்

---

தந்தையே என் இறைவா-உம்மை
அறியும் ஞானத்தையும்-முழு
இதயத்தோடு உம்மை அன்பு செய்யும்
ஆற்றலையும் எனக்கருள்வாய்

உன் மகனாய் மலர்ந்து உன் சித்தம் செய்து இன்புற
உண்மையாய் உம்மை அனுபூதியில் அறிந்து
உண்மைக்கு சான்று பகிர வரம் தருவாய்

விரும்பியதை அடையாததும்
விரும்பாததை அடைவதும் வாழ்வாகிட
நீயோ அருள்வரமாகிட-நெஞ்சிலே பேரானந்தம்.

குன்றும், குழியுமான பாதையில்
ஊதாரி மைந்தனாய் அலைந்தே
எல்லாம் இழந்தபின் இழக்காத செல்வமாய்
உன்னைக் கண்டேன் களிகூர்ந்தேன்.

தோல்விகளால் துன்புற்ற மனம் துவண்டு விடாமல் பக்குவப்பட
மேலும், மேலும் தொடர் தோல்விகள் தந்தாய்
நிலையில்லாத உலகில் நிலையானது
உன் அன்பொன்றே அறியும் ஞானம் ஈந்தாய்

வாழ்வைப் புரிந்து நான் மலர்ந்திட எத்தனை வீழ்ச்சிகள்
மாயப் பொன்மானைத்தேடி அலையாமல்
புண்பட்டு வழிதவறிப் போகாமல் என்னை ஆட்கொண்டாய்

நிலையற்ற புகழும், நிலைக்காத செல்வமும்
நான் தேடாமல் என்
நெஞ்சத்தை ஆட்கொண்டு நிம்மதி தந்தாய்

எல்லாம் மாறிடும் உலகில் எதுவும் நிரந்தரமில்லை
கொண்டு வந்தது ஏதுமில்லை
கொண்டுபோவதும் ஏதுமில்லை அனுபூதியில் அறிந்து
உன்னை அன்பு செய்திட என்னை ஆட்கொண்டாய்
காலம் கடந்திட,இளமையும், அழகும் கடந்து செல்ல
நெஞ்சிலே பேரமைதி, முடிவில்லாத ஆனந்தம்

எது நடந்ததோ அது நன்றாகவே நடந்தது
எது நடக்கின்றதோ
அதுவும் நன்றாகவே நடக்கின்றது
எது நடக்க இருக்கின்றதோ
அதுவும் நன்றாகவே நடக்கும் என்பது
ஞானமாக -நெஞ்சத்திலே நிம்மதி

என் பாரச் சிலுவை எனக்கு மீட்பானது.
துயரங்கள் என்னைச் செதுக்கிட
முடியிலே நரை, மொழியிலே மௌனம்
உண்மையே தெய்வம்-அன்பே பாதை புலனானது.

பிரக்ஞானம் பிரம்மம் என்ற பேருண்மையை நானறிய
அன்பினால் என்னை ஆட்கொண்ட தெய்வமே
சச்சித் ஆனந்தமாய் நீ
சதா சிவமாய் நீ

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-29-04-2023*

# அவள் பார்த்த பொழுது

---

அவள் பார்த்தபொழுது- பார்வையில் ஓயாத பூமழை
பார்வையும் தென்றலாய்த் தொட்டுத் தழுவிட
கண்களால் காதல் சொல்லும் அஞ்சன விழிகளால்
என் நெஞ்சினிலோ-காதலின் ஓயாத இன்ப அலை

விழிகளும் விழிகளைத் தழுவி வியந்து மகிழ
கண்டு போதையுறும் காமபானப் பேரழகை
கண்கள் பருகிச் சிவந்து மயங்க,
மொழியிலே கவிதை, நெஞ்சிலே காதலின் போதை,

வேல் விழிகளால் காதலை விதைத்து-பூவாய்
பூங்குழலில் என்னைச் சூடி மகிழ்ந்தவள்,
செம்மாங்கனிபோல் நாணிச்சிவந்து-தேனிதழ்களில்
அமுது பருகத் தந்த காதல் கனி

அஞ்சன வேல் விழிகள் அழகிய கவிதை சொல்ல,
செஞ்சந்தன மேனியிலே நாணம் பெண்மையின்
நளினம் சொல்ல கோவைச் செவ்விதழ்கள்-
காதல் கிளியே  கொத்திச்சுவை என்ற சேதி சொல்ல,
முக்கனியும் அவளில் இனிக்க,
முத்தமிழோ மொழியாய் ஒலிக்க,
முல்லையும், மல்லிகையும் அவளில் மணக்க
காதல் கடலாய் நின்றே
காதல் நதி என்னைக் கரைசேர்த்த என் காதலி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-29-04-2023

# அவதாரம்-உள்ளுணர்வின் எழுச்சி

---

இறைவா-நீ இன்னும் பல முறை பிறக்கவேண்டும்-
மானுட அவலங்கள் தீர்க்க
அவதாரங்கள் பல எடுக்கவேண்டும்

மாசுறும் பூமியின் நஞ்சுகள் நீங்கிட-**நீலகண்டனாய்,**
மாசற்ற பிரகலாதன்கள் கண்ணீர் துடைத்து
சிறுவர் துஷ்பிரயோக அசுரரை ஒழித்திட
**நரசிம்மனாய்** அவதரிக்கவேண்டும்.

ஓயாத அதர்ம யுத்தங்கள் ஓய்ந்திட-நல்லோர்
அருச்சுனனாய் வில்லேந்தி குருஷேத்திரம் ஏகிட
கீதை சொல்லும் –**கிருஷ்ண** அவதாரமாய்
பார்த்தனுக்குச் சாரதியாய் வரவேண்டும்

பாலியல் கொடுமை ஒழித்து ,
பாவையர் துன்பம் தீர்த்திட-சீதைகளின்
கண்ணீர் துடைத்திட **ஸ்ரீராமனாய் வந்தே**
இராவணரை வதைக்க வேண்டும்

அறியாமை அகன்று, மத வெறி மறைந்திட
**அஹம் பிரமஸ்மி** என்ற அத்வைதம் நிலைத்திட
**பெருமான் புத்தராய்** வரவேண்டும்
அனைவருக்கும் சத்தியம் புரிந்திட
**ஓஷோவாய்** வரவேண்டும

அன்பே இறைவன் என்று அறிந்து வாழ்ந்திட
கருணை பொழிந்து கடையவரும் மீட்புற
எதிரிக்கும் அன்பென்று மொழிந்திட்ட
**இயேசு பெருமானாய்** வரவேண்டும்

விவாகரத்துக்கள் மறைந்து
இல்லங்கள் திருக்குடும்பமாய் ஒளி பெற-
சூசை, மரி, மகன் இயேசுவாய் நீ வேண்டும்

இன்பமே சூழ, எல்லோரும் நலம் வாழ
சாதி, இன, மத,மொழி, நிற பேதங்கள் மறைந்திட
ஒன்றே குலம்! ஒருவனே தேவன்! எனப் போற்றிட
புதிய வானம், பதிய பூமி படைப்பாய் இறைவா

ஆயுதங்கள் இல்லாத அன்பு உலகில்
பசுவும் சிங்கமும் புல் மேய
விரியனும், குழந்தையும் ஒன்றாய்
கூடி மகிழ்ந்து விளையாடிட
மதங்கள் மறைந்து, பிரிவினைகள் ஒழிந்திட
அன்பே சிவம் அனைவரும் சமம் என்றே கூறு
அமைதிப் பூங்காவாய் உலகை மாற்று
அதுவே சொர்க்கம் எனக் கூறு.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-29-04-2023

# சீனத்துச் சிங்காரி

---

சீனப் பட்டு வியாபாரி சின் மின் யன்னுக்கு
தேவதைபோல் இருமகள்கள்
பூப்போல ஒருத்தி
பூங்சிட்டுப்போல மற்றொருத்தி.

வீரனின் வாள் உயிரைக் கொல்லும்
கன்னியரின் வேல்விழிகளோ-பல வீரர்களை
ஒரு பார்வையாலேயே பட்டெனக்
கொல்லாமல் கொல்லும்.

காதலில் வீழ்ந்தவர்கள் காமபாணத்தால் வாடித்துன்புற,
காதல் இதயங்களோ, கள்வடியும் பூக்கண்களை
தேன்வண்டுகளாய்க் காணத்துடித்திட,
கள்ளுண்டு காதல் பசியாறத் தவித்திட
பூவிழிகளும் வீரரை கொல்லும்
பொன்னுடல்களும் கூர் வாளை வெல்லும்.

மாவீரரும் மாதர் காதலால் துன்புற்றார்
மாவீரனும் பிறன்மனை நோக்கிட
மாண்பிழந்தே முடியிழந்து உயிரிழந்தார்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-29-04-2023

# எச்சில் முத்தம்

---

முத்த மழையில் நனைந்து, மோகக் குளிர் காய
சக்கி முக்கிக் கற்றகளாய்த் தேகம் உரசிக் -ஹோமத் தீயாய்
காமத் தீ வளர்த்து , இதழ் கொண்டு இதழ் “கள்” அருந்தி
ஆகுதியாய் காதலர் மாறிடக் கொண்டாடும் காமன் வேள்வி

காதல் போதை தரும் காமபானமோ முத்தம்?
காதல் நோய் தணிக்கும் காமத்துப்பாலோ?
மருந்தாய் அருந்தியும் தணியாத காதல் நோய்
விருந்தாய் கொண்டாடியும் தீராத விடாய்

பாவையைக் கொஞ்சி முத்தமிட்டுக்
கோவை இதழமுதம் கனிரசமாய் இனிக்குதென்று
செம்பவளவாய்க் கடித்துச் சுவைப்பார்

செவ்வாயிதழ் தேனோ, திராட்சை மதுவோ
வியந்து கவிபாடிக் களித்து, உயிர் உருக உடல் தழுவி
விழி சிவக்க, வாய் வெளுக்க-விடியும் வரை
காதல் போதையில் ரதி-மன்மதனாய் கூடி மகிழ்வார்

ஆனந்தத் தாண்டவமாய் ஆடிடும் காதல் காமமும்
தேகங்களின் உரசல்களில் தீய்ந்து மறையும்-காலவெளியில்
கலியாணமும் பாரச்சுமையெனக் கடந்துபோகும்

ஆசையும் மோகமும் தீர்ந்தபின்
அலைபாயும் காதலனும் புதுமலர் தேடிட
தெருப்புழுதியிலோ சூடாத மணமாலை
எரிநரகினிலோ ஏமாந்த அபலை

எச்சில் பண்டம் நீ, இனி யாருன்னைச் சூடுவார் -ஏமாற்றிய
காமுகரும் நாணிட, விழுந்தவர் வீறாப்போடு எழுந்தார்
காதலில் ஏமாற்றம் ஒரு முறைதான் என்றார்
முயன்றவரும் வாழ்வில் வெற்றிபெற்றார்
தோல்விகள் முடிவல்ல என்றே பிரகடணம் செய்தார்.

நம்பிக்கைதான் காதல்-நம்பியவளை
ஏமாற்றுதல் மன்னிக்க முடியாத பாவம்
காதல் புனிதமானது, புரிந்தவர் சிலரே அவரே புனிதர்
புனிதனுக்கே காதல், விலங்குகளுக்கோ காமம்.

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-30-04-2023*

# ஏழாம் சுவை

---

"அருஞ்சுவை ஆறு" அறிந்த நாவும் அறியாப் பெருஞ்சுவை இதுவென வியக்க
மேலும் மேலும் சுவைத்துக் களிக்கத், திகட்டாத தேன்மதுவென மயங்க
ஏழாம் சுவையாய் நீ ஈந்த முத்தம் இன்னும் என் குமுத வாயில்
அமுதாய் இனிக்குதடா என் காதல் கண்ணாளா

தென்றலின் சுகமும் தீண்டிடும் வரைக்கே
தேனினின் இனிமையும் நா சுவைக்கும் வரைக்கே
உன் அணைப்போ என் மோகக் குளிர் போக்கும்
அதிசயக் காதல் நெருப்படா

நினைத்து நினைத்து நெஞ்சம் மகிழ
அணையாத் தீயாய் நினைவிலும் கனவிலும்
என்னைச் சுட்டுத் தீய்க, அள்ளியணைத்து
காமத்தீயை அணையடா காதல் கண்ணாளா




கட்டிக்கரும்பென கடித்து சுவைத்தாய்-கட்டழகுமேனி
புதுவீணையென மோகனராகம் இசைத்தாய்
திகட்டாத மதுவெனத் தேன் இதழ் "கள்ளைக்" குடித்தாய்
காதல் போதையில் என் காதல் தேவதை நீ எனக்
கவிதை படித்தாய் -நெஞ்சம் இனிக்குதடா

காமத் தீயணைக்க உன்னைக் கட்டியணைத்தேன்-அணைக்க
அணைக்க வளரும் அணையாத் தீ இதுவென்றறிந்தே
எரிந்தும் தீயாமல் இன்புறுகின்றேன்
எண்ணெயாய் நானும் உருகுகின்றேன்

கனவிலும், நினைவிலும் காதற் காமம் என்னை வருத்த
கனியாய் கனிந்த கன்னி என்னைக் கடித்துச் சுவையடா
என் காதல் கொள்ளைக்காரா-இன்னும்
உன் முத்தச் சுவையோ என் இதழ்களில் இனிக்க
காதல் பசளையின்றி -உன் வஞ்சிக் கொடி பசலையில் வாட
என்னை உழுது உன்னைப் பயிரிடு காமக் கமக்காரா
பல்கிப் பெருகி பூமியை நிரப்பிட-காமம் கடவுள் தந்த வரம்
காமம் கடந்தால் கடவுள் அதுவே இன்ப வனம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-30-04-2023

# ஈ-மெயில் விடு தூது

---

காதல் கதிரே- உன் ஒளிமுகம் காணாமல்-என்
இதயக்கமலம் வாடுதடி-கானக்குயிலே
உன் தேவகானம் கேளாமல்
என் காதல் மனமும் ஏங்குதடி

என் முகவரி மறந்து பலவருடம் ஆனபின்
உன்னிடமிருந்து ஈ-மெயிலில
இன்றோர் அதிசய அழைப்பு

காதல் காயங்களால் புண்ணான நெஞ்சம்
கல்லாய்ப் மாறிட-என் முகநூலில்,
உன் முகநூல் பதிக்க-நீ விடுத்த
ஈமெயில் தூது சீண்டுவாரற்றுக் கிடக்குதடி.

வெள்ளி நரை சூடிய கூந்தலுக்கு மதுமலரும்
முகாரி பாடும் மஜ்னுவின் மனதிற்கு
கானக்குயிலின் பாடலும் எதற்கடி பெண்ணே?

வண்ணம் கலைந்த சித்திரத்திற்கு வரிசையும்
அங்கம் ஊனமான கலாபமயிலுக்கு
நடன அரங்கேற்றமும் ஏனடி கண்ணே?

பாலைக்கும், பாறைக்கும் பருவமழையும்
பூமழையும் எதற்கடி பெண்ணே?
காதல் விதை முளைக்க கற்பாறையில் இடமில்லை.
ஈமெயில் தூதிற்கும் என்னிடம் பதிலில்லை

உன் முகநூலுக்கு என்றோ முடிந்த என் கதை
தொடர்கதையாய்த் தேவையில்லை.
என் தனிமைத் தவத்தை கலைக்க-ஊர்வசி
மேனகையாய் யாருமில்லை

விளையாத நிலத்தில் விதைத்த -காதலும் பொய்யே!
கன்னியர் மனதில் காதல்-வெறும் பருவகால உணர்வே

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-30-04-2023*

# இனி ஒரு காதல் எனக்கில்லை

---

தந்தி அறுந்த வீணையாய் இதயம் துடிக்க,
நூலறுந்த காற்றாடியாய் நினைவு தவிக்க,
கண்ணீர்ப் பூச்சூடி விழிகள் கரைய-என்னை
மறந்தவளைப் நினைந்து வருடங்கள் பல கழிந்தும்
மறக்க முடியாமல் தவிக்கும் காதல் நெஞ்சம்.

இதயமே நீ போனபின், இனியொரு
காதல் எனக்கில்லை
வசந்தமே உன்னைப் பிரிந்தபின்,
இனியொரு பருவம் எனக்கில்லை

காதல் ஒரு முறைதான் அதுவும் உன்னோடுதான்
உன்னிடம் பறிபோன என் இதயம் என்னிடமில்லை
இன்றும் அது உன்னோடுதான்.

ஒரு பூவாய் வாடமுன் என்னைச் சூடிக்கொள்
என் உயிர் அணையமுன்
காதல் தீபத்தை ஏற்றிக்கொள்.

என் நெஞ்சமெல்லாம் நீயே நிறைந்திருக்க
இதயவானில் உலாவரும் தேன்நிலவாய் நீயிருக்க
இனி ஒரு காதல் எனக்கில்லை - என் இதயத்தில்
இன்னொருத்திக்கு என்றும் இடமில்லை

அலைகள் ஓய்ந்தாலும்-ஓயாது-உன்மீது
நான் கொண்ட காதல், மலைகள் சாய்ந்தாலும்
சாயாது என் மனம் கொண்ட காதல், மடியுமுன் என்னைச்
சூடடி, நிலவே விடியுமுன் என் வானில் ஒளிரடி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-30-04-2023

# இனிக்கும் இன்ப இரவு

---

விழி மலர்ந்த அல்லிகள் வியந்தன-ஆயிரமாயிரம்
வெள்ளிப்பூக்கள் மலர்ந்த சோலையில் உலாவரும்
இந்த வெண்ணிலாதான்
எத்தனை அழகாய்த் தோன்றுகிறாள்

வெண்ணிலவும் வியந்தது இனிக்கும் இன்ப இரவில் மலரும்
இந்த உலகில்தான் எத்தனை எத்தனை வண்ணப்பூக்கள்.
ஆயினும், என்னைப்போல் ஒரு வெண்ணிலவை
ஏனோ இறைவன்
இவர்க்காய் படைக்கவில்லை, பாவம்.

எழுந்து விழுந்து கரை தழுவி இரைந்து கரையும் அலைகளும்
தனியாய் வானில் உலாவி உடல் மெலிந்து தவிக்கும் நிலவும்
ஒன்று சேர ஒரு நாள் வாராதோ?
வான்நிலவும், கடலும் கொண்ட காதலும் கைக்கூடாதோ?

கதிர்க் கரங்களால் நிலவு தழுவிட
காதலாகித் தவித்த கடலும் பொங்கியது
கடலில் முகம் பார்த்த நிலவும்-கடற்
காதலன் இதயத்தில் என்றும் நான்தான்
வியந்து நாணியது-பௌர்ணமியாய் பூத்துச் சிரித்தது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-08-05-23

# இழிது, இழிது, இரத்தல் இழிது

---

உழைப்பதற்கு மனமின்றிச் சோம்பி
ஊன் வளர்த்து உயிர்வாழும் மானிடம்-ஏழையின்
வேடத்தில்-பொய்யாய் இரந்து நின்றது.
ஆலய வாயிலில் நாளும்.

உழைப்போ இழிவாக, இரத்தலோ பிழைப்பாக
இவர்தம் நாடகங்கள்- ஏமாந்த
உள்ளங்களால் இவர்தம் வருமானங்கள்.

மாலைவரை இரந்தவர் இரவில் மதுவில் நீராடிக்களிக்க,
போதையில் விழுந்தவர் கலிங்கம் உடல் நழுவிக் கிடக்க,
வாய் வழி எச்சில் வழிந்தோட, ஏமாற்றிப் பிழைக்கும்
இழிவாழ்வு சொல்ல சிதறிக்கிடக்கும் சின்ன மதுக்குப்பிகள்.

பிறர் உழைப்பை இரந்து கவர்ந்திட-போட்டிடும்
ஏழ்மைக் கோலம் வெறும் வேடம்
இரத்தலும் பகல் கொள்ளையான நாடகம்

இரப்பவர்க்கு ஈவது தானம்
இல்லாதவர் இரக்கமுன் ஈவது தர்மம்.
உழைத்து வாழ்ந்தால் இரத்தல் ஒழியும்
உழைப்பின் பெருமை உலகு அறியும்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-30-04-2023

# இரவு- நிலவு-நட்சத்திரம்

---

விண்ணில் இருப்பதால் நிலவும் அழகு
மண்ணில் அலைவதால் கடலும் அழகு
கொடியில் இருப்பதால் வண்ணமலரும் அழகு-என்
காதல் இதயத்தில் இருப்பவளோ அழகிலும் பேரழகு

அறிவிருந்தும் கூட்டை அழித்து தேனைத் திருடும்
கொடியவனாய் மனிதன்
கொடுக்கிருந்தும் பூக்களைக் கொட்டாத
ஞானியாய்த் தேனீ

பூக்களைப் பறித்து சிலைகளுக்குச் சாத்தும்போது
தேனீக்களும், பூஞ்செடிகளும் இறைவனோடு வாடும் துயரம்.

மதுமலர் இருக்க, மனம் வாடித் தீக்குளிக்கும் விட்டில்கள்
காதலில் தோல்வியுற்றவைதான் போலும்

கண்ட நாள் முதல், உள்ளம் கொண்ட காதலாள்
சூரியனைச் சுற்றி ஆடிவரும் பூமி

இரவில் அணைத்து-பகலில் வெளிறி -ஏங்கித் தவித்து,
தேய்ந்து வளர்ந்து-ஒரு தலைக் காதலனாய் -பூமிகாவைச்
சுற்றியலையும் சந்திரன்- புதிய தேவதாஸ் போலும்

வானமகள் அணியும் வண்ண ஆடையும் மாலை வரைக்கும்
வைரம் மின்னும் ஆடை கூட விடியும் வரைக்கும்
என்னே இவள் அழகு!

உன்னைக் கண்டபோதுதான் -என் நெஞ்சத்துடிப்பு தெரிந்தது.
நெஞ்சில் கவிதை , நினைவிலே வண்ணக் கனவு
பூக்களும் உன்னைப்போல் அழகாயில்லையடி
தேனும் உன் செவ்விதழ் முத்தம்போல் இனிப்பாயில்லையடி

மலர்களிலும் உன் பூவாசம்
மதுவுண்ட வண்டுகளிலும்-குவளைப்
பூ விழிகள் கண்டு புது மயக்கம்

யார் சூட்டினார் செடிகளுக்கு இத்தனை மலர்க் கீரிடங்கள்?
யார் பூசினார் பூக்களுக்கு நறுமண வாசங்கள்?
யார் தீட்டினார் மலர்களுக்கு இத்தனை வண்ணங்கள்?

பூவையை பூவாகக் கண்ட திருநாள்.
மனதிலோ-காதல் ரீங்காரம்-நீ
கடந்துபோகும்போது-தென்றலிலும் உன் வாசம்
நீ நடந்து வரும்போது
என் இதயத்துடிப்பிலும் புதுவேகம்.

உன் கண் பட்டபோது கதிர் பட்டு மலரும்
பூ நெஞ்சம்-உன்னைக் காணாதபோது
அமாவாசை இருளில் தவிக்குதடி

உன்னைப் பார்த்த பின் நெஞ்சிலே கவிதை, நினைவிலே கனவு
வண்ண உலகும்-வாழவேண்டுமென்ற துடிப்பும் காதல் மனதில்

பிரம்மன் உன்னைப் பூக்களால் படைத்தான்போலும்
கண்வழி நுழைந்து -நெஞ்சில் காதலை விதைத்து
ஒரு பூவாய் என்னைச் சூடிக்கொண்டாய்.
இதயம் முழுதும் காதல் பூவாசம்.

காணுமிடமெல்லாம் புத்தர் சிலைகளும்.
வெள்ளரசும்-ஈழத்தமிழனை அச்சுறுத்தும்
சிங்களப் பேரினவாதக் குறியீடுகளா?

விழிகளும் பூக்களாய் மாறிட
தேனீக்களாய்ப் பார்வைகளும் மொய்த்திட
ஒட்டிக்கொண்ட இதயங்கள் மகரந்தகளாய் இடம் மாறிட
காதல்கூட அயன்மகரந்த சேர்க்கைபோலும்?

யாரை முத்தமிட இத்தனை இதழ்கள்
-இந்த ரோஜாவுக்கு?

கதிர் தொட மலர்ந்து, கதிர் மறைய
வாடி உதிரும் பூக்களும்,
உடன் கட்டையேறும் கற்புக்கரசிகளோ?

கண்ணீர்ப் பூக்களும், நொருங்கிய இதயங்களும்,
கசங்கிய கவிதைகளும், குவிந்து கிடக்கும் காதல் பாதை
இத்தனை கரடுமுரடானதா?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-30-04-2023*

# இதுதான் காதலா ?

---

கண்டதும் குவளை விழிகளில் பூத்திடும் பரவசம்,
செவ்வாயிதழ்களில் இனித்திடும் கனிரசம்,
மலர்ந்திடும் முறுவலில் மனதை மயக்கிடும் மன்மத நவரசம்,
பொன்மேனியிலோ சுவாசத்தை மயக்கிடும் பூவாசம்,
பேரழகோ- விழிகள் பருகியும் பார்க்க தெவிட்டாத மதுரசம்,

மதுரசமும் -மங்கையிவள் இதழ்ரசத்தில் மயங்கிப் போதையுற,
மலர்களும் -பூவையிவள் பேரழகில் கிறங்கிப் பூமழை பொழிய,
அன்னமும்-அணங்கிவள் நடை கண்டு மயங்கும்
கோகிலமும்-கோதையிவள் குரல் கேட்டு கானம் இசைக்கும்

மயிலும் மாதிவளைக் கண்டு குதூகலத்தால் தோகை விரித்திட,
கல்லான காளை என் இதயத்தில் காதலின் முதல் துளிர்ப்பு
கன்னி மகளுக்காய்-நெஞ்சிலே புதுவிதத் தவிப்பு-
கனவிலே களிப்பு-இதுதான் காதலா?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-30-04-2023*

# இன்பத்துப் பால்

---

கலைந்த கார்குழலும், கலங்கிய விழிகளும் சொல்லும்
என் காதலை, கண்ணாளனிடம் காற்றே-
தூதாய் எடுத்துச் செல்

நினைவிலும் நீ, கனவிலும் நீ , நீங்கினால் சுடுகின்றாய்
நெருங்கினால் குளிர்கின்றாய்-அதிசயக் காதல் தீயே
எரிந்தும் தீய்க்காத உன் காதல் வேள்வியில்
இதயமே ஆகுதியாய் நானடி

ஒரு விழியாள் நோய் தந்து
மறு விழியாள் நோய் தணித்தாய்-வேல் விழியே
மையெழுதிய உன் விழிகள் செய்யும்
காதல் மாயம்தான் என்ன?

கண்டும் மகிழ்ந்தேன், கனவிலும் மகிழ்ந்தேன
நினைத்தும் மகிழ்ந்தேன்-காதலே
கள்ளிலும் போதையடி -உன் நினைப்பு
மலரிலும் மென்மையடி-உன் அணைப்பு

நினைக்கும்போதெல்லாம்
அமுதாய் இனிக்கும் உன் உறவு
நீ மறந்தபோது மட்டும்
ஆலகால விஷமாய்க் கசக்குதடி

நெஞ்சில் நிறைந்தபோது-சொர்க்கம் தந்தாய்
நினைவில் விரிந்தபோது கவிதைகள் தந்தாய்
உன்னைப் பிரிந்தபோது ஏனடி கண்ணீர் தந்தாய்?

உன் நெற்றிப் பொட்டும், நீள் விழிகளும்
என்னைக் காதல் பித்தனாக்குதடி
உன் முத்துப்பற்களும், மோகனச்சிரிப்பும்
காதல் சுரத்தை கூட்டுதடி

விழி ‘‘கள்’’ உண்டு-விழிகள் தழுவி
விழிகள் போதையுறும் காதல் உலகில்
மொழிகள் சுவையிழக்கும்
விழிகள் பேசும் -காதல் மொழியில்
உயிரும் மெய்யும்  ஒன்றாய்க் கரையும்

உன் இதயவாசலில் கோலமிட்டேன்-காதலே
நீயோ காணவில்லை-உன் உதய வானில்
பூபாளமிசைத்தேன் கேட்கவில்லை ஏனடி?

மும்தாஜே! என் முழு நிலவே
கண் பார்த்து நெஞ்செழுதிய அன்புக் காவியமே
என் சித்தம் நினைப்பு
செய்கை உள்ளவரை-என் இதயம்
உன்னை ஒருபோதும் மறவாது

கையளவு மனசுக்குள் கடலளவு காதல்
வைத்தேன், என் காதலே-ஏனடி
அதைக் கண்ணீராய் மாற்றினாய்?

காலையில் சூடி மாலையில் வீசிட-காதல் என்ன
ஒரு நாளைக்குள் வாடும் பூவா?

பார்த்தாள்- பார்த்தேன், பருகினாள்-உருகினேன்
நினைத்தேன் தும்மினாள் , பார்வையால் தழுவி
புன்னகையால் இதயத்தை திருடினாய் ஏனடி?

விழிக்கதவு திறந்து பார்த்தாய்
இதழ்கதவு திறந்து புன்னகைத்தாய்
ஏனடி இதயக்கதவை மட்டும் இன்னமும்
பூட்டி வைத்திருக்கின்றாய்? வலிக்குதடி

பூ எதற்கு பூவை நீயிருக்க, நகை எதற்கு புன்னகையிருக்க,
நறுமணம் எதற்கு- வாசமாய் நீ மணக்க
தேன் எதற்கு-இதழ் “கள்” இருக்க,  நானே நீயானபின்
என் சுவாசக்காற்றே -என் உயிர் உனதடி

பார்க்கத் தவித்துப் பார்த்ததுவும்
பேசத்தவித்து பேசியதும், காதலாகிக் கனிந்ததுவம்
கனவாய் பழங்கதையாய் ஆனதடி
கண்ணம்மா கண்ணில் கங்கை பெருகுதடி

விண்ணில் உன் பெயரை எழுதிவைத்தேன்
அன்பே காற்று கலைத்ததடி
மண்ணில் உன் பெயரை எழுதிவைத்தேன்
கடலலைகள் அழித்ததடி-என்றும் நிலைக்க
-என் நெஞ்சில் உன் பெயரை எழுதிவைத்தேன்-ஏனடி
என் இதயத்தை துடிக்க வைத்தாய்?

பால் நிலவோ வான் வெளியில்
தேன் நிலவோ-வெகு தொலைவில்
காதல் நெஞ்சோ பாழ்வெளியில்
கண்ணீர்ப் பூக்களோ மனவெளியில்

உன்னை மறப்பதென்பது -என் இறப்பு
உன் நினைப்போ- என் உயிர்துடிப்பு

விழிகளோ இவை, இல்லை-என்னை
விழுங்கிடும் காமன் கயல்களா?

செவ்விதழ்களா-இவை-
மலர்ந்த முத்தப்பூக்களின்
புத்தம் புது தேன் கிண்ணங்களோ?

ஒரு நாளில் வாடும் பூவல்ல நம் காதல்
வாடா மலராய் எந்நாளும் வாழ்ந்திருக்கும்
அழியா உறவடி காதல்

உன் கன்னச் சிவப்பினில்
நாணம் வரைந்ததோ காதல் ஓவியம்
உன் மோகனச் சிரிப்பினில்
உள்ளம் எழுதியதோ காதல் காவியம்

இமைக்க மறந்தேன், என் இமைகளே திரையாகி
உன்னை மறைத்து விடுமோ என்று,விழிக்க மறந்தேன்
விழிப்பே தடையாகி இன்பக் கனவு
கலைந்துவிடுமோ என்று

பூவென்று உன்னை நெஞ்சில் சூடிவைத்தேன்
ஏனடி-முள்ளாய் மாறினாய்?

வஞ்சி மகளே-உன் நெஞ்சுக்குள் நானில்லை
என்ற சோகம், பூ நெஞ்சுக்கு நஞ்சானதடி,
என் நிம்மதி பறிபோனதடி

நீருக்குள் வாழும் மீனாய்-என் இதயம்
உன் நினைவுக்குள் வாழுதடி

யாரிவள் தேவதையா இல்லை மோகினியா?
நீலவிழிகளால் நெஞ்சை திருடியவள்
கானமொழியாள் கவிதை பாடியவள்

உன்னை மட்டும் பிரம்மன் ஏனடி
இத்துணை அழகாய்ப் படைத்து
காதல் வரமாய் என்னிடம் தந்தான்.

விண்ணெங்கும் தேடினேன்-வெண்ணிலவே
உன்னைக் காணவில்லை-மண்ணெங்கும் தேடினேன்
தேன்மலரே உன்னைக் காணவில்லை
கண்கலங்கி நெஞ்சம் நொருங்கிட
என்னுள்ளே தேடினேன்-காதலே
என்னுள் ‘‘நீயே’’ ‘‘நானகி’’ நின்றாய்
என்னே இன்பமடி

உன் முத்துப் பற்களும், மோகனச்சிரிப்பும்
என்னைக் காதல் பித்தனாக்குதடி
உன் தங்கக் குழலும் வண்ணவிழிகளும்
காமன் கணையை நெஞ்சில் சொருகுதடி

விழிகளால் என் நெஞ்சில் கவிதை எழுதி
மொழிகளால் -என் செவிகளில் காதல் தேனை ஊற்றி
புன்னகையால் என் நெஞ்சுக்கு -காதல் பூமாலை சூட்டி
வண்ணக் கனவுகளால் என் இரவுகளை வசந்தமாக்கிய
காதல் தேவதை இவள்தானா?

வண்ணப்பூவே- என் இதயம் உனதடி
வாசமலரே என் காதல் தேசம்-நீயடி

உன் கண்பட்டதால் புண்பட்ட காதல் நெஞ்சம்
நாணப் புன்னகையால் குணமான மாயம்தான் என்ன? காதலா?

சக்கி முக்கி கற்களாய் உரசிக்கொண்டன விழிகள்
பற்றிக் கொண்ட நெருப்பில் சிக்கித் தவிக்குதடி என் இதயம்

அழகே உன்னைக் கண்டதும் இமைக்க மறந்தன விழிகள்
துடிக்க மறந்தது இதயம், கண்டதும் போதையுறும் அழகே-
என்னை ஆட்கொண்ட காதல்புலமா- நீ
இல்லை அதிசய காந்தப்புலமா?

அழியாத ஓவியமாய் -அன்புக் காவியமாய்
இன்றும் என் நெஞ்சில் நீயடி
தீராத சோகமாய், ஆறாத காயமாய்
இன்றும் உன் காதலடி

கல்லில் பெய்த மழைபோல் ஆனதடி என் காதல்
முள்ளில் விழுந்த பழந்துணியாய் நோகுதடி  நெஞ்சம்

உண்டு சுவைத்த மதுவிலும் இனியது-மாது
இவளைக் கண்டு சுவைத்த சுவை

கார்கூந்தல் பூச்சொல்லும், சேல் விழிகளின் மை சொல்லும்
இதழ்கள் ஊறும் தேன் சொல்லும் கண்ணாளா எனைப் பிரியாதே
காதல் நோயுற்றேன் உன்னால் என்று

நீள் விழிகளிலோ காயாத ஈரம்,
பூவிதயத்திலோ இமயப் பாரம்
காதல் காயங்களால் ரணமான தேகம்-மனமோ
ஒற்றை குயிலாய் முகாரிபாடும் சோகம்

பூவாகித் தேனாகி மதுவாகிப் பூத்தவளே-காதலாகி
காமத்துப்பாலாய் இனித்தாள்

உன்னோடிருக்கும் வரை-நெஞ்சமெல்லாம்
காதல், மொழியெல்லாம் கவிதை
உன்னைப் பிரிந்தபின்
நெஞ்சமெல்லாம் காயம், விழிகளில் கண்ணீர்

குயில்களாய் பாடி மகிழ்ந்ததுவும், மயில்களாய் ஆடி திரிந்ததுவும்
கிளிகளாய் பேசி களித்ததுவும்,கனவாய்ப் பழங்கதையாய் போயிட
இன்றோ நினைவினிலே ஆறாத ரணம்
இதயமோ வரண்ட பாலைவனம்

ஒரு பூவாய் மலர்ந்தேன்-நீ சூடிக்கொள்ளவில்லை
ஒரு பண்ணாய் ஒலித்தேன்-நீ ஆடி மகிழவில்லை
ஒரு கவிதையாய் விரிந்தேன் நீ இரசிக்கவில்லை
கண்ணீராய் உதிர்ந்தேன் ஏனடி கண்கலங்கினாய்?

என் நெஞ்சிலே-பூத்து மணக்கும் காதல் நந்தவனமா இவள்?
என் சுவாசத்தை நிறைக்கும் வாசப் பூந்தென்றலா இவள்?
என் கண்களிரண்டை கொள்ளை கொண்ட தேன்நிலவா இவள்?-
நாளும் என் பூவிதயத்தை துடிக்கவைக்கும் தேவதையா இவள்?

உன் இதயத்தின் ஒரு கோடியில்
எனக்கோர் இடம்கொடு-பெண்ணே
என் காதல் வாழும்

கண்வழி நுழைந்து நெஞ்சினில் விழுந்த காதல் தேன்துளியே
நினைவிலும், கனவிலும் இனிக்க காதல் தந்தவளே
விண்வழி பறக்க இறக்கைகள் தந்தாய்
நீர்மேல் நடக்க கால்கள் கொடுத்தாய்
பெண்ணே நீ வாழி!

உன்னை என் விழிகளில் எழுதிவைத்தேன்
ஏனடி என்னை அழவைத்தாய்.
உயிர் காற்றினில் உலவவிட்டேன் என் மூச்சைத் திணறடித்தாய்
இதயத்தில் குடிவைத்தேன்- துடிக்கவைத்தாய்
உயிரில் கலந்துவிட்டேன்-ஏனடி என்னை மடியவிட்டாய்?

விம்பங்கள் தோன்றி மறையும் என் விழித்திரையில்
உன் மோகனவிம்பம் மட்டும் மறையாத மாயமென்ன?
இமை மூடியும் உருவம் மறையவில்லை
துயில் கூடியும் வண்ணம் கலையவில்லை
என் நெஞ்சுக்குள் நீயிருப்பதாலா?
உன் நெஞ்சுக்குள் நானிருப்பதாலா?
சொல்லடி என் வண்ணக்கிளி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-30-04-2023

# கடலும் கவிதையும்

---

ஓய்ந்து நிற்கும் ஆழ்கடலோ ஆனந்த மௌனத்தில்,
ஓயாது ஆனந்த தாண்டவமாடிடும் அலைகடலோ
பேரின்ப இசைவெள்ளத்தில்

ஓய்வும், ஓயாத அசைவுமாய்,
மௌனமும் இசையுமாய் மகத்தான நிகழ்வுகள்
ஆனந்தத் தாண்டவமும், பிரபஞ்ச கானமுமாய்
ஆனந்தப் பெருநிலைகள்.

விழிப்பும், தூக்கமுமாய் வியப்பிலாழ்த்திடும் அழகு,
ஆழ்ந்த நீலமும் வெண்மையுமாய்
எழுந்து விழும் அலைகளின் வண்ணவுலகு.

கரைதழுவி, மீளக் கடல் சேரும் அலைகள்
பிறப்பறுத்த பிறவிகளோ?
ஆழ்கடலும் அமைதி கண்ட பெருமான்
ஞான புத்தரோ?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-01-05-2023

# கடவுள் தந்த வரம்-காதல்

---

எனக்காய் இறைவன் உன்னைப் படைக்க
என் இதயமோ உன்மேல் காதல் கொண்டு தவிக்க,
உனைக் கண்ட நாள்முதல் காதலில் விழுந்த இதயம்
கவிஞனாய் என் புது உதயம்

வானுக்கு ஒரு நிலவு-என் வாழ்விற்கு நீதான்
என்றும் என்தன் தேன்நிலவு,
நீயின்றி நானில்லை
உன் நினைவோ, நான் வாழும் உலகு

கண்களோ உன்னைக் காணத் தவிக்க
இதயமோ கதை பேசத் துடிக்க
கண்டதும் ஊமையாகும் மொழிகள்
கதை பேசிக்களிக்கும் விழிகள்.

உறக்கம் துறந்து தனிமையில் உருகித் தவிக்கையில்,
என்னை உறங்கவைத்து விலா என்பை எடுத்து
எனக்காய் இறைவன் படைத்த இன்ப ஏவாள் நீதானடி

என் இதயம் உனக்காய்த் உருகித் துடித்திட
நீயோ கல்லாய் நின்றாய் ஏனடி கண்மணி?
உன் இதயம் என்ன எலும்பா சொல்லடி ?

கடவள் தந்த வரமடி- காதல்
கடைக்கண்பார்த்து
என் காதல் சுரம் தணியடி பொன்மணி

எலும்பால் பெண்ணைப் படைக்காமல்
என் இதயத்தின் ஒரு பகுதியால்
இறைவன் உன்னைப் படைத்திருந்தால்
நீயும் எனக்காய்த் துடித்திருப்பாய்?
காதலும் இனிதென்று புரிந்திருப்பாய்?

கள்ளும் புளித்திட, காவியமும் சோகம் இசைத்திட
கள்ளோ? காவியமோ காதல்?
சொல் என்தன் காதல் பைங்கிளி

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-01-05-2023*

# கடவுளின் காதலி

---

மண்ணால் மனிதனைப் படைத்த -மனிதன்
என் என்புகள் ஏங்கி நின்றன என்னவளைத்தேடி
இன்பக்காதல் தந்த ஏவாளை நாடி
அன்றுதான் அறிந்தேன்- ஆண்டவன் பெண்ணை
ஏன்தான் என்பினால் படைத்தான் என்று.

விலக்கப்பட்ட கனியை உண்ணத்தந்து
அறிவின் விழிப்பை தூண்டிவிட்ட காதல் கன்னி
கடவுளைப்போல் நாமும் மாறிடக்
கனவு கண்ட காதல் கனி-காலமெல்லாம்
கைகோர்த்து தன்னோட நடந்துவரத்
தந்தையாம் கடவுளையும், இன்பவனத்தையும்
காதலால் விட்டுப்பிரிந்த கனவுக் கன்னி

ஏவாளை மறக்க முடியாமல் இதயம் தவிக்க
இறைவனுக்கும் காதலி உண்டென்று எனக்கும் புரிய
தன் சாயலாய் என்னைப் படைத்தவன்
எவள் சாயலாய் ஏவாளாய்ப் படைத்தான்?

அதுவும் அவள் சாயல்தான்
அவன் காதலி சாயல்தான்-அவன் நெஞ்சை
கொள்ளையிட்ட பெண் சாயல்தான்
பாவம் இறைவனுக்கும் ஒரு விலா என்பில்லை
விசாலமான அவன் இதயத்திலும்
காதல் தோல்வியின் காயங்கள் ஆறவில்லை

தன்னுருவில் ஆணையும் தன் காதலி வடிவில்
ஏவாளையும் படைத்த இறைவன்-தோற்ற தன்
காதலும் மானுடரால் நிறைவேறக் காத்திருக்கிறான்,
தன் காதலை நினைந்துருகுகிப் படைக்கின்றான்,
படைப்பே அவன் காதல் கதைதானோ?
அவன் துயரக் காதல் கவிதைதானோ?

துடிக்கும் அவன் இதயம் காதல் காதல் என்று தவிக்க
ஓ மானிடரே காதல் செய்யுங்கள்.
காதல் நெருப்பில் வெந்து பாருங்கள்
இதயம் துடிப்பதும், என்பு உருகுவதும் புரியும்!

மறக்கமுடியாதவள் சாயலை மண்ணால் படைக்காமல் -
இதயத்தைக் காத்திடும்-விலா என்பினால் படைத்து-
தன் காதலிக்கும் அழிவில்லை,
தன் காதலுக்கும் அழிவில்லை என்கிறான் இறைவன்.

இறைவியைக், கண்டால் காதலரே சொல்லுங்கள்
ஊனிலும், என்பிலும், உள்ளோடும் குருதியிலும் ஒன்றி
இறைவனையும் உருக்கிடும் அவன் அழியாக் காதலை

ஈட்டி குத்தித் திறந்த இயேசுவின் இதயமும்-தன்
கடைசித் துளி இரத்தத்தையும் சிந்தி-மானுடர்மேல்
மனுமகன் கொண்ட மாறாக் காதலைச் சொல்லியது
துளைத்துக் களைத்த ஈட்டியின்
விடாய் தணித்திட- துளி நீரும் வழங்கியது

காதல் சாவதில்லை-காதலரே
சாவதும் காதலில்லை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-01-05-2023

# கலா சோதி மனம்

---

பாடிக்களித்த சோடிகுயிலைப்-பலகாலம்
பிரிந்து வாடும் மனம்-
ஒன்றாய்க் கூவிக்களிக்க ஏங்கியே
சூடிக்களிக்கும் மலருக்காய்-
காதல் நோன்பிருக்கும் தினம், தினம்

பள்ளி நிலவோடு பாடம் படித்து, கடைக் கண்ணால்
காதலும் படித்து, புள்ளிக் குயிலோடு கானம் இசைத்து
காதல் நிலவோடு வானில் உலாவரக்
கனாக்காணும் மனம்-காதல் இசை பாடும் தினம்

கொஞ்சிக் கதைபேசி-வஞ்சிக் கொடி
கலாவோடு விழாகாணும்
நாளை எண்ணி- செகசோதி மனம்.
கடல் கடந்து தனியே வாடும் தினம்

காத்திருப்பான் கமலக்கண்ணன் எனக் காதல் மனம் தவித்திட
பூத்து நிற்கும் பூவிழிகள் வாடுமே எனக் காளை மனம் துடித்திட
ஒன்று சேரும் நாளுக்காய் இரு மனங்களும் ஏங்கிட
காதல் இத்துனை இனிதா? எனக் கவிதை எழுதிய
காதலை அறியாத மடக்கவிஞனோ அவன் நண்பன்
பிரம்மச்சாரிகள் சங்கத் தலைவன்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-01-05-2023

# காலை நேரக் காதல்

---

காலை முதல் யன்னல் வழியே பார்த்திருக்கும் கண்கள்
காதலி வரும் வரை கூம்பிய கமலமாய்ச் சோர்ந்திருக்கும்
கதிர் நீயாகிக், கமலம் நானாக- உன்னைக் கண்டு
உதயம் வந்ததெனப் பூத்தாடும் என் இதயம்

நெஞ்சோ உன் அன்பிற்காய் ஏங்க-நினைவோ
நிழலாய் உன்னைத் தொடர-நீயறியாத என் காதலில்
எத்தனை கண்ணீர்பூக்கள், புன்னகை மலர்கள்

விழிகள் கலந்து, மொழிகள் கடந்து, பார்வைகள் தழுவிட
ஊனையும் உயிரையும் ஒன்றாய் ஊடுருவும் காதல் பரவசம்.
என் கவிதைகளில் உன் காதல், என் கனவுகளில் உன் ஊடல்
என் வாழ்விலோ உன்னால் காதல் தேன் தூறல்

உன் பார்வை தொடும் போதெல்லாம்
நெஞ்சுக்குள் பொங்கும் பரவசம்
உன் புன்னகை மலரும் போதெல்லாம்
உன்னைத் தழுவிடும் அதிசயம்

உன் வாசம் என் சுவாசத்தை நிறைக்க
என் நெஞ்சில் பூவாசம் மணக்க
காந்தப்புலத்தில் சிக்கிய ஊசியாய்
காதல் புலத்தில் நர்த்தனம் ஆடும் என் இதயம்.

உன் நெஞ்சிலோ நானில்லை-உன்னைத் தவிர
என் நெஞ்சிலோ வேறு நினைவில்லை.-
நீ நினைப்பதற்கு ஆயிரம் உண்டு-என் நினைவிலே
என்றும் உன் நினைவுதான் உண்டு

கண்டு கற்றேன் காதலை உன்னால்
அன்பே, நீதான் என் காதல் கற்கண்டு
உள்ளம் உள்ளியதும் உன் காதலை
கவிதையாய் சொல்வதும் உன் காதலை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-01-05-2023

# **காம வேதம்**

---

காதல் மழையின்றி வாடும் உன்தன் காமினி நான்
காதலால் என்னை உழுது உன்னை விதைத்து
காதல் மழையால் நீராட்டி என்னைத் தாயாக்கு
உன்னை தந்தையாக்குவேன்
***உயிர் படைத்து நாம் கடவுளாவோம்***

கன்னி என்னைத் தேன்கனி எனக் கடித்துச் சுவையடா
மாதென்னை, புதுமதுவென்றெ பருகிக் களியடா
பூவை என்னைப் பூவாய் சூடி மகிழுடா-காமனாய்க்
காதல் செய்து காமினி என் காமசுரத்தை ஆற்றடா

நான்கு வேதங்களுள் அடங்காத "***காமவேதத்தை***"
நாம் ஒன்றாய்ப் படித்துப்பார்த்திட
ஏழு ஸ்வரங்களுக்குள் அடங்காத
"***பள்ளியறை ராகத்தை***" என்னில் நீ மீட்டிப் பார்
நாம் தேவர்களாய்ப் பிறந்திட
மன்மத யுத்தத்தில் போராடி மடிவோம்

மொட்டாய் மூடிக்கிடந்த என்னைப் பூவாய் மலரவைத்த
உன் முதல் முத்தம் தேனாய் இனிக்க -மேனியெங்கும் காமசுகம்
மின்சாரமாய் பரவித்தாக்க , நீ தந்த காதல் பரவசம் பேரின்பமடா

கரையாய் நீயிருக்க கடல் அலையாய் உன்னை அள்ளியணைத்தும்
காதல் போதையும் தீரவில்லை, காமசுரமும் நீங்கவில்லை
நிலவும் நெருப்பாய் சுட- நீள்விழிகளும் சிவந்திட
சூடிய மலரும் வாடுதடா, மயக்கும் இன்ப இரவு மலரும் போது
பக்கத்தில் நீயின்றி பஞ்சணையும் என்னைத் தீய்க்குதடா

பரப்பிரம்மமும் தன்னை ஆண் பெண்
என பிரித்துப் படைத்திட-நாம்
ஒன்றாய் சேரும்போது தோன்றும்-இந்த
" தெய்வீகப் பரவசம்தான்" "இறைவனா"
சத் சித் ஆனந்தமா? சிவசக்தியின்
ஆனந்தத் தாண்டவமா?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-02-05-2023*

# கானம் மறந்த வானம்பாடி

-------------------------------------------

நிலவு வரும்போது- நெஞ்சிலே கலைந்த கனவு வரும்,
காதல் துயரம் வரும், கண்ணீர் மழை வரும்,
கவிதையில் சோகம் வரும்

உடைந்த உள்ளம் உருகித் துடிக்க
கலைந்த கனவு தோன்றி மறைய
புண்ணாண நெஞ்சுக்குள், வாடாத அவள் பூமுகம்
புகைபடிந்த ஓவியமாய்க் காட்சி தரும்

நிலவிலே கதைபேசிய நாட்களும், நீலக்கடலருகே
கவிதை சொன்ன பொழுதுகளும்
அமாவாசையிருளுக்குள் அஸ்தமிக்க,
கரைவந்து அழும் அலைகளாய் நெஞ்சின் நினைவுகள்.
மூளிக்கோலமாய் என் காதல் கோலங்கள்.

கூவும் குயிலும், கொஞ்சும் கிளிகளும்
நெஞ்சைப் புண்ணாக்க,
ஆற்றிட மருந்தில்லா நோயாய்
இன்றும் மனதை வாட்டிடும் காதல்.

தென்றலும் தீய்த்திட, திங்களும் வாட்டிட
இளவாடையில் மெய்யும் தீக்குளிக்க
மாலை சூடி மணமேடை காணாத காதல்
கானம் மறந்த வானம் பாடியாய்
தன்னந்தனியே மௌனித்திருக்கும்.

கண்களால் கதைபேசிய கன்னியிடம்
காதல் வசப்பட்ட நெஞ்சம்,-ஒரு புன்னகையால்
என்னை மயக்கிய காதல் கொள்ளைக்காரியிடம்
தன்னைப் பறிகொடுத்த இதயம்-

மறந்த அவள் காதலை-மறுபடியும்,
மறுபடியும் எண்ணி துன்புறும் மனம்
காதல் சிலுவையில் அறைபட்டே-தினம்
தினம் கல்வாரிப் பலியாகும்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-02-05-2023*

# கனவும் நினைவும் காதலும்

---

ஆண்டாளே காதலாகி என்னை நீ ஆட்கொண்டபின்
நெஞ்சிலும் நீ, என் நினைவிலும் நீ,
கனவிலும் நீ, காட்சிகளிலும் நீ

நிலவிலும் நீ, மலரிலும் நீ,
காற்றிலும் நீ, அலை கடலிலும் நீ,
மூச்சிலும் நீ, என் பேச்சிலும் நீ,
என் கவிதையும் நீ. என் கானமும் நீ

உனையன்றி நினைக்க ஏதுமில்லை,
உன்னைத் தவிர நேசிக்க யாருமில்லை.

கானக்குயிலிலும் நீ, கலாபமயிலிலும் நீ
அறுசுவவையிலும், ஏழு சுரங்களிலும்
ஆனந்த பள்ளிலும் நீ.

என்னை ஆட்கொண்ட ஆண்டாளே-
காதல் இத்துனை இனிதென்று
கனவிலும் நான் நினைக்கவில்லை

தூக்கமும் தொலைந்திட, பசியும் தாகமும் மறந்திட,
காதலே உன்னை எண்ணித் தவிக்குதடி என் மனசு
காதலாகிக் கடலாய்ப் பொங்குதடி இளவயசு

நீயின்றி நிலவும் சுடுகுதடி, மலரே
உன்னைக் காணாது மாலை வந்ததென
மலர்போல் மனமும் வாடுதடி
காதலே நான் சூடும் மணமாலை நீதான்
நான் பாடும் மோகனராகமும் நீதான்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-02-05-2023

# கண்களே, கண்களே காதல் சொல்லுங்கள்

-----------------------------------------------------------------

கண்களே, கண்களை கவ்விக் கொள்ள-மெய்யெங்கும்
காதல் மின்னலாய்ப் பரவிச் செல்ல
இதயத்தை தாக்கும் காதல் மின்சாரம் -இளமேனியெங்கும்
காதல் மழையின் இன்பப் பரவசம்

கண்களால் களவாய் என்னைப் பருகி
காதல் விடாய் தணித்த காமக் குடிகாரா
உன் போதையோ தீயாய் என்னைப் பற்றிக்கொள்ள
காதல் போதையோ என்னை வருத்திக்கொல்ல
பேதை என் நெஞ்சை களவாடிய
பொல்லாத காதல் கள்வன் நீதானா?

யாரும் பாராதபோது-சட்டென்று என்னை
இறுகக் கட்டியணைத்து மெல்ல முத்தமிட்டாய்,
காதல் சுரத்தில் கன்னி நான் வாட
இதயமோ இந்த அணைப்பிற்காய் ஏங்கித் தவிக்க
காதல் மின்சாரம் தாக்கி
கன்னி மாய்ந்த காதல் கதை இதுதானா? சொல்

என் காட்சியும் கனவும் நீயாக-காதலாய் இதயத்திலும்
கவிதையாய் மொழியிலும் பிறந்தவன்-என் நெஞ்சை
நாளும் கண்களால் கொத்தி காதல் சொல்லும்
காதல் மரங்கொத்திப் பறவை இவன்தானா?

இவனைப் பார்தாலே போதை-பேதை என்னை
இவன் பார்த்தாலும் எனக்குப் போதை
மீண்டும் மீண்டும் களவாய்ப் பார்க்கத் தூண்டும்
கனவிலும் பார்க்க கன்னி இதயம் ஏங்கும்-
என் காதல் தலைவன் இவன்தானா?
பேதை நெஞ்சே, காதல் போதையின்றிச் சொல்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-02-05-2023

# கன்னியும் காளை மனசும்

---

பாவை முகம் பார்த்து பால் நிலவும் மயங்க,
பூ விழி பார்த்து தேன்சிட்டும் கிறங்க,
கொடியிடை பார்த்து பூங்கொடியும் தழுவத்துடிக்க
கனிமொழி கேட்டு பூங்குயிலும் கரைந்ததே

அழகு நடைபார்த்து அன்னமும் நடை திருத்த,
பூங்குழல் பார்த்து பூவினமும் வியக்க
செவ்விதழ் பார்த்து செவ்வாயும் முத்தம் கேட்க,
மலைமகளோ, திருமகளோ மாதிவள் எனத்
தேவரும், அரமாதரும் அதிசயத்தனரே

மாந்தளிரோ, பூந்துளிரோ மங்கையிவள் மேனி என மலர்களும் மயங்க,
பொன்மேனி வாசத்தில் மல்லிகையும் முல்லையும் மணக்க,
மையிட்ட விழிகளில் கயல்களும் கிறங்க
முத்துப்பல்வரிசையும், மோகனப் புன்னகையும் அள்ளிக்கொள் -
ஆசைதீர அணைத்துக்கொல் என்றழைத்ததே

நூலிடையில் மேகலை ஆடிக்குலுங்கிட
ஆண் மனதோ அம்பு தைத்த மானாய் வாடிக்கலங்கிட
கைவளையும் கால் கொலுசும் கட்டியம் சொல்லிட
காளை மனசோ கலாபமயிலாய் ஆடிக்களித்ததே

வருவது வான்நிலவோ இல்லை தேவதையோ என
என் மனம் கலைமானாய்த் துள்ளிக் குதிக்க-காதல் பசி தீர்க்க,
பாலோடு பழம் ஏந்தி பாலும் பழமுமாய்ப் பருவமங்கை
காதலால் என்னை ஆட்கொண்ட தேவ கங்கை

முத்துச் சிரிப்பில் முக்கனியும் மலைத்தேனும் இனித்திட
என் நெஞ்சை -காதலால் வெள்ளமிட்ட  தேன் கங்கையோ?
கொள்ளையிட்ட தேவ மங்கையோ இவள்?

மனம் மலைத்தே களித்திட, விழிகள் சுவைத்தே
போதையில் தள்ளாடிடத் தவித்திட , இதயம் துடித்தே மயங்கிட
மாங்கனியோ சுவைத்துப் பார், தேன்சுனையோ பருகிப்பார்
என அழைத்திட மதுமலர் கூந்தல் மாதிவள் அழகில் மயங்கினேன்
காதல் மதுவில் மூழ்கித் காதலாகித் தவிக்கும் காதலன் யான்.

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-02-05-2023*

# காதல் அத்வைதம்

-----------------------------------------

காதலே! உன்னை நினைத்திட மொழியிலே தேன்சுவை,
உன்னை நெருங்கிட சுவாசத்திலோ மலர்ச்சுவை,
என் இதயத்திலோ இன்பபேருவகை.

உனை சேரும்போதோ என்னை "நான்" இழந்து
அகங்காரம் கழிந்து நானே நீயாகி
அத்வைதமானேன்

வெற்றுப் புல்லாங்குழலில்
வேணுகோபாலனின் அற்புத கானம்
மனமழிந்த கைலையில்
சிவசக்தியின் ஆனந்தத் தாண்டவம்.

காதலும் முக்தியின் பாதையோ?
காமமும் கடவுளின் ஜாதியோ?
சிருஷ்டியும் கடவுளே!, சிங்காரமும் கடவுளே
தூய உள்ளத்தவர்க்கு சத்சித் ஆனந்த தரிசனமே

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-02-05-2023

# காதல் எரிமலை

---

பொன்மேனி தழுவாமல், என்மேனி தகிக்கும்,
செவ்விதழ்த் தேன் அருந்தாமல் காதல் நெஞ்சம் விடாய்க்கும்,
கார் கூந்தலில் மலர்சூடாமல் என் மனம் வாடும்,
காதல் மதுவே, காதலும் போதையடி-கனிரசமதுவிலும்
கண்மணியே உன் இதழமுதம் இனிமையடி,

மொழிகடந்த உன் அழகை கவிதையில் வடிக்க
வார்த்தைகள் தேடி கவிஞனும் தவிக்க,
விழிசுவைத்த உன் அழகை ஓவியமாய் வரைய
வண்ணங்கள் தேடி ஓவியனும் களைத்தானடி

இதழ் சுவைத்த இன்னமுதை கனிகளில் தேடி
காதல் இதயமும் விடாய்க்க-ஆரத்தழுவிய
அருஞ்சுகத்தை அலைபாயும் மெய்யும் தேடித் துடிக்க
நெஞ்சிலே கண்விழிக்கும் சோக எரிமலை
நினைவோ எரிநரகின் இழிநிலை.

உறங்காத உள்ளத்தில்-ஓயாது உருகிக் கரையும் ஒற்றை குயில்
-காதல் கங்கை பாய்ந்த இதயத்தில்-சோகக் கங்கையின்
புதுப்புனல், என் காதலே! ஓ என் காதலே!

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-03-05-2

# காதல் கதை பேசும் நேரமே

---

காதல் கதை பேசினேன்-காதல் கிளியோ மௌனமானது
காதல் இசை பாடினேன் கானக் குயிலோ ஊமையானது
காதல் நடனமாடினேன் கலாபமயிலோ ஆட மறந்தது-பின்
தேடியும் காணாமல் கண் மறைந்தது.

நிலவைத் தேடினேன்-காதல் நிலவிற்கோ அமாவாசை,
மலரைத் நாடினேன்-வாச மலருக்கோ விடியாத பொழுது.
என் காதலும் சோகக் கவிதையானது
என் கவிதைத் தூதும், கானல்நீராய் போனது.

அருகிருந்தும், அவளோ வான்நிலவாய்
வெகுதூரம், மதுமலராய் பூத்திருந்தும்
மாலை சூட வழியில்லாத் துயரம்.

காதலனானபோது மொழியெல்லாம் கவிதை
மனமெல்லாம் கனவு, நினைவெல்லாம் பூமழை,
காதலும் கனவானபோது தனிமையின் ஏக்கம்-
நெஞ்சினிலோ சோகச் சூறாவளியின ஓயாத தாக்கம்.

மறக்க முயன்றும் -மறவேன் என அடம்பிடித்து
நினைத்து உருகும் நெஞ்சம்,
காதலின் ஆணிவேரை அறுக்க நினைத்தும்
முடியாமல் தவிக்கும் காதலின் இனிய பந்தம்
என்ன செய்வேன் இறைவா என்ன செய்வேன்!

மறப்பதற்கா காதல் -இல்லை?
மறந்தவளை நினைந்து உருகுவதற்கோ காதல்?
மறக்கமுயன்றும் முடியவில்லை
மடியத் துணிந்தும் காதல் மடியவில்லை.
காதல் சிரஞ்சீவியா?

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-03-05-2*

# காதல் கொடி

---

தேசியக் கொடியோ நட்டிற்கு
தொப்புள் கொடியோ தாய் பிள்ளை உறவுக்கு
தாலிக்கொடியோ தாரத்திற்கு
என் காதல் பூங்கொடியே- உனக்கோ
தேராய் என் காதல் இதயமடி

முல்லைக் கொடியோ-முழு நிலவோ, கல்நெஞ்சில்
காதல் விதை தூவிய காதல் கற்பக தருவோ
முத்தமிழோ, முக்கனியோ காளை உள்ளம் குணமாக
காதல் மொழி சொல்லிய தேவதை

கயல்விழியால் என்னைத் தழுவடி-மொட்டாய்
மூடிக்கிடக்கும் இதயத்தில் காதல் மலரட்டும்
கனி இதழ்களால் என்னைப் பருகடி
காதல் விடாய் தணியட்டும்

என் காதல் கதிரவனே உன் கமலம் நானடி
இனிக்கும் இன்ப இரவு நிலவே உன் அல்லி நானடி
உன்னாலே என் விடியல்-உன்னோடு
நாளும் என் காதல் குளியல்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-03-05-2023

# காதல் கொடிது

---

உன்னைக் காணாமல் என் கண்கள் உறங்க மறுத்து,
கண்ணீர் சிந்திச் சிவந்திட-சிரைக்க மறந்த தாடி
புதராய் வளர்ந்து முகத்தை மூடிட
விம்மலும், பெருமூச்சும் என்னை ஆட்டிப்படைத்திட
உணவு துறந்து உடல் மெலிந்து வாடும் உள்ளம்

ஒரு கண்ணாடிபோல் இதயம் உடைந்து நொருங்கிட,
மழையின்றி வாடும் பயிரானேன்
அனலில் விழுந்த புழுவானேன்-லைலா
காதல் கொடிதென்று புலம்பும் மஜ்னுவானேன்.

பூ மனமும் புண்பட்டு நொந்திட காதலும் முள்ளாய்ப் போனதே?
காதலும் என்னை விட்டுப் பிரிந்திட இதயமும் பாலையாய் ஆனதே!
பொன்மானே, நீயில்லாத உலகு நிலவில்லா வானாய் மாறிட
கானம் பாடிய-கவி மனம் ஊமைக் குயிலானதடி

காரிருளாய் நெஞ்சம்- காதல் நிலவே
ஒளி கொடு கொஞ்சம்,
முள்ளாய் வாட்டுது மலர் மஞ்சம்
காதலே, என்றும் நீயே என் தஞ்சம்.

இரக்கம் காட்டடி என் காதல் இராட்சசி-இல்லையேல்
உறங்கிடக் கொல்லும் நஞ்சை ஊட்டடி
காதல் நெருப்பாய் நீயிருக்க-பஞ்சாய் என் நெஞ்செரிய
காதல் நான் செய்த பாவமா பூங்கொடி?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-03-05-2*

# காதல் குடிகாரன்

---

அமுதைப் பொழிந்த காதல் நிலவோ ஆலகால விஷத்தைக் கக்கியது?
கனிமொழி செப்பிய செவ்விதழ்களே கருந்தேளாய்க் கொட்டியது,
தேன் மலரோ முள்ளாய்த் தைப்பது, காதல் நிலவோ தீயாய் எரிப்பது
-காதலே போ போ-சாதலே வா வா

பாற்கடல் நஞ்சோ பரமசிவன் கழுத்தில்
பார்வதியின் காதல் நஞ்சோ தேவதாஸ் என் நெஞ்சில்
சிவனும் நானே, தேவதாஸீம் நானே
ஓ என் பார்வதி, ஏனடி என்னை மறந்தாய்?
நீலகண்டனாய் என்னைக் காக்க மறந்தாய்?

காதல் குடிகாரன் நான் -மங்கையர்
அன்பும், அழகும் நெஞ்சை தொடும்போதெல்லாம்
பேதை என் நெஞ்சுக்குள் காதல் போதை,
என் பேச்சிலும், எழுத்திலும் இசை பாடும் கவிதை

அழகைக் கண்டபோது-என் கண்களிலும் போதை,
கவிதையிலும் போதை, காதல் கலைந்த கனவானபோது
மனதிலும் போதை, என் மதுவிலும் போதை.
முதவாய் மங்கையர் காதலும் போதை ?

மதுவின் போதையோ விடியும்வரை
காதல் மாதின் போதையோ மடியும்வரை.
என்ன செய்வேன் நான் -என்னவளை
எப்படி மறப்பேன் இறைவா

நெஞ்சை வருத்தும் காதல் நஞ்சிற்கு மருந்தாக
கொஞ்சம் மது குடிக்கிறேன்
கொல்லும் நஞ்சைக் கலந்து குடிக்கிறேன்
விடியலில்லாக் காதல் குடிகாரன்
மடிந்து தூங்கிட இறைவா இரங்கிடு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-03-05-2

# காதல் நிலவு

---

காதல் வானில் காளை நானும் உலாப்போனேன்
கண்ட நிலவோ கண்களால் கதை சொல்ல,
விண்ணுலவும் நிலவோ மண்வந்து உலாவுது
மனம் கவிதை எழுத மனதிலே ஆனந்தம்

காணும் காட்சிகளில் எல்லாம் புது வண்ணம்
தென்றலும், தேன் நிலவும், அலை கடலும்
வண்ண மலர்களும்-காதல்
காதல் என்றே கவி பாடும் எண்ணம்.

நூலிடையோ இறுகக் கட்டிக்கொள், பூவுடல் நொறுங்கிட
அணைத்து “கொல்” படர்ந்து தழுவி “கொல்” என்றது
கோவை இதழ்களோ கவ்விக் கொள், “கடித்துக்கொல்”
கனிரச மதுவை “உறிஞ்சிக் கொல்” என்றது

பூமேனியோ, வாசம் நுகர்ந்துகொள்
“ஒருடலாய் ஒட்டிக் கொல், மணக்கும் தேன்மது
என்னை “மணந்துகொள்” என்றது,
கார்குழலோ-மலர் சூடிக்கொள்
காதல் மழையில் நீராடிக்கொள் என்றது

மையிட்ட மலர்விழிகளோ என்னை “மயக்கி கொல்”
என்னில் மயங்கிக் கொள் என்றது
முத்துநகையோ, மோகனப்புன்னகையோ
முத்தமிட முந்திக்கெள், கொடிமுந்திரிகை
மதுவால் போதையேற்றிக்கொள் என்றது

உயிரும் மெய்யும் பனியாய்க் கரைய
உள்ளமோ காதல் தீயில் மெழுகாய் உருக
நெஞ்சுக்குள் காதல் வெள்ளம்
நினைவிலோ கவிதை வெள்ளம்

நிலவே -நீயின்றி என் காதல் வானம் ஒளிராது
தேன் மலரே -நீயின்றி
என் மனதில் காதல் மலரும் பூக்காது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-03-05-2

# காதல் புதையல்

---

கண்களால் கொள்ளையிட்டு,-நெஞ்சுக்குள் பூட்டி வைத்த
அன்பு பொக்கிஷமாய்க் காதல்!

காதல் கூட-அதிசய
போதைவஸ்து போலும்-நினைக்கவே
நெஞ்சில் போதை ஏறுகின்றது.

காதலுக்காய் பல காவியங்கள்
உலக அதிசயங்களில் ஒன்றாய்
**தாஜ்மஹால்**

காதலும்  கொல்லும்-காதல் தோல்வியும்
மெல்ல கொல்லும் நஞ்சே!

நினைக்கவே இனிக்கும்-காதல்அமுதிலும் இனிதே!
நினைந்து உருகிட,-நெஞ்சை கொல்லும் காதல்
ஆலகாலத்திலும் கொடிதே!

கவி பாடிய காதலர்களும்-நீதி மன்றத்தில்
காதல் கூட்டைப் பிரித்துக் கலைத்து
விவாகரத்து செய்து அந்நியராய்ப் போனார்கள்
இதயம் எழுதிடும் காதலும் இன்று விவாகரத்தில் முடிய
ஒப்பில்லா காதலும் வெறும் சட்ட ஒப்பந்தமோ?

இந்த இதயம் கூட பூவனம்தான்போலும்
இதில் மலர்ந்து உதிர்ந்த ரோஜாக்காள்தான் எத்தனை.
முள்ளோடு சில! முள்ளின்றிச் சில!

மதுவின் போதையோ விடியும்வரை
மாதர் காதல் போதையோ மடியும்வரை

காதலால் துடிக்கும் இதயங்களின் தாளங்கள் வேறு போலும்,
எனக்காய்த் துடித்த இதயமும் தாளம் மாறிட
என் இதயமோ -இன்றும் அவளிற்காயத் துடிக்கின்றது.

காலமெல்லாம் காத்திருப்பேன் என்றவளும்
வார்த்தை மாறினாள் -ஒரு கனவுபோல் கலைந்து
பறவைபோல் பறந்து-புதுத்துணையோடு
கடல் கடந்து போனாள்.

கண்களால் காதலை நெஞ்சில் விதைத்து
கனவுகள் பிறக்க, கவிதைகள் உயிர்க,
பார்த்தும், நினைத்தும் நெஞ்சம் பரவசமடைய,
காதலனாய் உருமாற்றியவள்
உருகி எரியும் மெழுகாய்-என்னை உருகவிட்டாள்

உணர்வுகளில் தீ எரிய-உயிரும்
அவளை எண்ணிப் பனியாய் உருக
இன்னோர் தேவதாஸாய்
என்னை உருமாற்றிவிட்டாள்.

காவியக் காதல்களிலும் காதலிகளின் அழுகுரல்
கண்ணீர் சிந்திக் கானகம் போன கர்ப்பிணிச் சீதை
காதலுக்காய்  விதவைகோலம் பூண்ட கண்ணகி
கண்ணீர்த் தவமிருந்த சகுந்தலை
வனத்தில் அல்லாடிய தமயந்தி
துயரமே உருவான திரௌபதி

அபலைகளின் வாழ்வில்
காதலும் கற்பனையோ? காவியமோ?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-03-05-23

# காதல் சஞ்சீவினி

---

உன் கண்பட்டுக் காதலால் புண்பட்ட என் நெஞ்சில்
ஆறாத காயங்களடி, தீராத காதல் சுரமடி
கனவிலும், நீயடி, நினைவிலும் நீயடி
என் நெஞ்சுக்கள் என்றும் உன் நினைவுதானடி

செவ்வாய் மொழிகேட்டு-இதயம் துடித்துத் தவிக்க
செவிதழ்த் தேன் சுவைக்க இதயம் நோன்பிருக்க
என்னை வாட்டும் வண்ணக் கனவும்-என் காதல்
வானில் உலவும் காதல் தேன் நிலவும் நீதானடி

உன் பெயரைச் ஓதிட மூடிய என் இதழ்களும்
மலர்ந்து புன்னகை பூ பூக்கும்.-உன்னைக் காண-என்
மூடிய இமைக் கதவுகளும் தாழ்திறக்கும்
உன் பூவுடலின் வாசம் என் சுவாசத்தை உயிர்ப்பிக்கும்
உன் பொன் விரல்களில் ஸ்பரிசம்
உணர்விழந்த என் மேனியை சிலிர்க்கவைக்கும்

வாட்டும் விரகதாபத்தால்-உயிரும் வாடிட
சுட்டும் சுடர்விழிகளும் கனவிலும் இதயத்தை வருத்திட
கடைக்கண் பாரடி கண்மணி
என் நோய் தீர்க்கும் காதல் சஞ்சீவினி

என் காட்சி யாவும் நீயாக-என் கவிதையும் உன் மொழியாக-
என் வாழ்வும் உனதாக காலமெல்லாம் நம் காதல் வாழ
காதல் தேவதையே காதலனாய் வரம் தந்து அருள் புரிவாய்?
ரதி , மதனாய் வாழ என் ரம்பையே
என் இதயத்தில் காதல் நர்த்தனம் புரிவாய்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-03-05-23*

# காதல் திருடி

---

சொல்லாமல் ஒருத்தி என் இதயத்தைத் திருடிச் செல்ல
சொர்கத்தின் கதவுகள் திறந்திட
மாயமாய் மறைந்த சோகம்
மனதிலே ஒலிக்கும் ஓயாத தேவராகம்

பூமழை பொழியும் வானமும்
அமுதைப் பொழியும் நிலவும்
காதல், காதல் என்றே பாடி இன்புற
என் இதயத்திலோ ஓயாத ஆனந்த கானம்

கனவிலும் அழகு முகம் களிப்பூட்ட,
கானமழை பொழிந்து காளை மனம்
கலாபமயிலாய் ஆடிக்களிக்க- வாழ்விலே
காதலின் வண்ணக்கோலங்கள்.

***அவள் என்னை மறந்துபோனாள்.***

என் கருவானில் நிலவில்லை,
பாடி அழைத்தும்-என் கானத்திற்கு
கவிக்குயிலிடம் பதிலில்லை,
என் காதல் தவத்திற்கு வரமில்லை,
காதல் தேவதையோ கண் மறைந்த நிலை

ஒளியிழந்தது என் உலகு, நிலவிழந்தது என் வானம்
பொருளிழந்தது என் பாடல்-காதல் மழையின்றி
உன்னை பிரிந்து வரண்டு பாலையான என் உள்ளம்

கள்ளச்சிரிப்போடு வந்த காதல் கனவாய்க் கலைந்திட,
உள்ளக்களிப்போடு வாழ்ந்த வாழ்வும்
ஒருத்தியால் உருக்குலைந்திட,
இழந்தபின் தெரிந்தது-இழப்பின் அருமை
பிரிந்தபின் தெரிந்தது-பிரிவின் கொடுமை

***கொடிது கொடிது காதலின் வலி கொடிது***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-03-05-23